# கல்கி

KALKI
9.4.2006 ரூ.8.00
80 பக்கங்கள்

குடும்பத்துடன் களிக்க...



கூட்டணி ஆட்சி?

திருப்பம் வருமா?



போரை நிறுத்தும் காதல் கடிதம்!



# அடுத்த இதழ்

# கல்கி

# 'நம்மாளுங்க'

## சிறப்பிதழ்!

இவ்வார (26.03.06) சிறுகதைகள் அனைத்தும் நெஞ்சை நெகிழ வைத்தன.

விருகம்பாக்கம், வெ.குருசங்கரன்

திவ்யா மதன் தன்னம்பிக்கையுடன் கூடிய புதுமைப் பெண் இயக்குநராய் மிளிரப் போவது நிச்சயம்!

கோவை, டி.ஜெய்சிங்

திரைப்படத் துறையினராலேயே ஃபிலிம் நியூஸ் ஆனந்தன் புறக்கணிப்பட்டது வேதனையானது.

ஈரோடு, சாந்தி கல்யாண்குமார்

மாமூலான ஜோக்குகளிலிருந்து மாறுதலாக உள்ளன போட்டியில் தேர்வாகும் ஜோக்குகள். குறிப்பா 'போலீஸ் ஜோக்ஸ்'!

திருச்சி, ராஜிராதா

சௌகரியம் அதிகரித்தால் கூடவே சங்கடமும் அதிகரிக்கும் என்பதை 'கள்ளன் கடத்தும் டாலர்கள்' உணர்த்தியது.

பொன்மலை, ஆர்.பிரகாஷ்

'தம்பி' விமர்சனம் அருமை!

திருவாரூர், டி.முருகேசன்

கூட்டணி மாறிய வைகோ, கராத்தே தியாகராஜன் பேட்டிகள் சபாஷ்!

கோவை, என்.ரங்கநாயகி

எழுத்தாளர்கள் கட்சி ஆரம்பிக்கும் 'கலகல' பக்கத்தைப் படித்து சிரிப்பலையிலிருந்து மீளவே முடியவில்லை.

வேலூர், வெ.ராம்குமார்

மாடம்பாக்கம் சித்தர்கள் ஆலயம் பற்றிப் படித்ததும், தரிசிக்கக் கிளம்பி விட்டேன்.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்

ஒரு சமயம் முதல்வர் ஜெ. 'வைகோ ஒரு வாய் வீச்சாளர். அவரது பேச்சுகளை நான் பொருட்படுத்துவதில்லை' என்று சொல்லியதை வைகோ மெய்ப்பித்து வருகிறார். அய்யோ பாவம்!

செங்காடு, செ.ஆ.கிருஷ்ணமூர்த்தி

'சம்பத்து எப்படியும் பேசும்' என்ற



## ஸ்பீட் போஸ்ட்!

பாரதிய ஜனதா கட்சியிலிருந்து ஒவ்வொருவராக வெளியேறிக் கொண்டிருப்பதைக் காட்டிய 'தாமரைப்பூ' கார்ட்டூன் அருமை.

*கோ.புதூர், இரா.சக்கரபாணி*

தலைமுறைகள் பகுதியில், சுப்பையா முத்துராமன் சினிமா படப்பிடிப்பை பார்த்ததே இல்லை என்றது என்னை வியப்பிலாழ்த்தியது!

*விளாத்திகுளம், அ.அப்துல்காதர்*

கானா உலகநாதன் பேட்டி சூப்பர். தேர்தல் பற்றிய அவருடைய கானா செம தமாஷ்!

*சென்னை, சி.பரத்*

தராகவின் சிலேடைக் கிண்டல் சூப்பர்!

*சென்னை, லெ.நா.சிவகுமார்*

முரண்பாட்டின் மொத்த உருவமாகத் திகழ்கிறார் வைகோ. வைகோ சார், கூட்டணி மட்டும் தடம் மாறவில்லை. உங்கள் பேச்சும்தான்.

## அய்யோ பாவம்!

*நாட்டரசன்கோட்டை, எஸ்.ரோஜா*

'நல்ல மனுஷன்' என்ற கதை நிஜமோ கற்பனையோ... நானும் இதேபோல் ஏமாற்றப்பட்டேன்!

*மேற்கு மாம்பலம், ஆர்.ராஜேஸ்வரி*

வட்டமேஜை




# கல்கி

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**
**ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 2225 1021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

இதழில் வெளியாகும் விளம்பரங்களின் உண்மைத் தன்மைக்கு கல்கி நிர்வாகம் பொறுப்பல்ல.

**கடுமையான பிரசாரத்துக்குத் தயாராகி வருகிறார் பா.ம.க நிறுவனர் மருத்துவர் ராமதாஸ். "எந்தக் கேள்வி வேண்டுமானாலும் கேளுங்க" என்று உற்சாகமாகப் பேசத் துவங்கினார்...**

**என்ன சொல்லி வோட்டுக் கேட்கப் போகிறீர்கள்?**

"1991 - 96ம் ஆண்டு ஆட்சியில் இருந்தபோது அவரால் பாதித் தமிழகம் பாழானது. இந்த ஐந்தாண்டுகளில் மீதித் தமிழகமும் பாழானது. தொழில் வளர்ச்சியில் மூன்றாவது இடத்தில் இருந்த தமிழ்நாடு பின்னுக்குத் தள்ளப்பட்டு ஆறு, ஏழாவது இடத்துக்குப் போய்க்கொண்டிருக்கிறது. தொழிலதிபர்கள், தொழில் துவங்குவது பற்றி முதல்வரிடம் பேசலாம் என்றாலே ஆறு மாதங்கள் காத்திருக்க வேண்டியதாக இருக்கிறது. தமிழக அரசில் மூன்றரை லட்சம் பணியிடங்கள் நிரப்பப்படாமல் இருக்கின்றன. வேலை வாய்ப்பு அலுவலகத்தில் 51 லட்சம் பேர் பதிவு செய்துவிட்டுக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அதில் 19 லட்சம் பெண்கள். விவசாயிகள் வறட்சி, வெள்ளம் என்ற சுழலில் தள்ளப்பட்டு நொந்து போயிருக்கிறார்கள். கல்வி, சுகாதாரத் துறை என்று எந்தத்



துறையிலும் பின்னடைவுதான் - ஒரே ஒரு துறையைத் தவிர அது மது ஆயத்தீர்வை துறை. கடந்த 22 ஆண்டு காலத்தில் இல்லாத அளவுக்கு ரூ. 24,000 கோடி டாஸ்மாக் மூலம் வருமானமாம்! இது தவிர அவர்களது சாராய ஆலையில் வரி ஏய்ப்பால் கொள்ளையடிப்பது பல நூறு கோடிகள். இவர் ஆட்சி தொடர்ந்தால், அடிப்படை உரிமை, அரசியல், நாகரிகம், ஜனநாயக மரபு எல்லாம் குழி தோண்டிப் புதைக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. அவரை விரட்டியடிக்க மக்கள் தயாராகி விட்டார்கள். ஜெ. ஆட்சியின் அலங்கோலங்களை நான் மேடையில் பட்டியல் போடும்போது 'மக்கள்தான் 'இதை விட்டுட்டீங்களே' என்று எடுத்துக் கொடுக்கிறார்கள். அந்த அளவுக்கு இருக்கிறது நிலைமை."

**2001-ல் ஜெ ஆட்சி வர நீங்களும் துணை**

நின்றீர்களே!

''நல்ல நடிகையல்லவா... பிரமாதமாக நடித்து எங்களை ஏமாற்றி விட்டார். நிர்ப்பந்தம் காரணமாகப் போனோம். முதலில் வெளியே வந்தவர்கள் நாங்கள்தான்.''

**இப்போது வைகோ உங்கள் கூட்டணியை விட்டுப் போனது அணிக்குப் பலவீனம்தானே!**

''தன்னை 19 மாதம் பொடாவில் வைத்த கட்சியோடு, வைகோ கூட்டணி அமைத்திருப்பது கண்டு மக்களும் ஏற்றுக்கொண்டார்கள். இதனால் கிராமப்புறங்களில் நல்லிணக்கமும் அமைதியும் நிலவின. தமிழ்ப் பாதுகாப்பு தளத்தில் நாங்கள் ஒன்றாக இணைந்தோம். அரசியல் ரீதியாகவும் இணைய முடியும் என்று நம்பினோம். முடியவில்லை. தேர்தலுக்குப் பிறகு பல்வேறு தளங்களில் சேர்ந்து செயல்படுவோம். தேர்தலில் சிறுத்தையும் நாங்களும் நேருக்கு நேர் மோதும் ஒரு தொகுதியில்கூட எந்த உரசலும் இல்லாமல் நடந்து கொள்வோம்.''



# “கலைஞரே முதல்வர்!”

## ராமதாஸ் தீர்மானம்!

மக்கள் முகம் களிக்கிறார்கள். கிண்டல் செய்கிறார்கள். நையாண்டி எஸ்.எம்.எஸ்கள் வலம் வருகின்றன. இப்போது எங்கள் அணிக்கு ஒரு உத்வேகம் கூடியிருக்கிறது. மூன்று ஸீட்டுகளுக்காகத் தற்கொலை செய்து கொண்டார் வைகோ என்பது என் கருத்து.''

**சமுதாய ரீதியாகப் பார்க்கும்போது திருமாவளவனோடு உங்களுக்கு இருந்த நெருக்கம் பல பகுதிகளில் உங்கள் கட்சியின் செல்வாக்கைப் பாதித்திருப்பதாகச் சொல்கிறார்கள்?**

''முற்றிலும் தவறான கருத்து. எங்கள் தோழமையை இரண்டு சமுதாய

**ஜெ. பாராளுமன்ற தேர்தலில் இழந்த செல்வாக்கை மீட்டு வருவதாகச் சொல்கிறார்களே!**

''மக்கள் யாரும் இப்படிப் பேசவில்லை. சில ஊடகங்கள் மூலம் இது போன்ற பொய்ப் பிரசாரம் நடக்கிறது. இன்னமும் சில நாட்களில் அந்த ஊடகங்களும் தங்கள் கருத்தை மாற்றிக் கொள்ளும்.''

**ஊடகங்கள் ஏன் ஜெ.வுக்கு ஆதரவாகச் செயல்பட வேண்டும்?**

''இதுதான் ரொம்ப ஆச்சர்யமா இருக்கு. பத்திரிகை, பத்திரிகையாளர்கள் மீது ஜெயலலிதா 96 வழக்குகள் போட்டார். தன் சிநேகிதி என்றும் பாராமல் இந்து பத்திரிகை ஆசிரியரான பெண்மணியை கைது செய்ய எண்ணினார். இந்த ஓராண்டில் ஜெயலலிதா ஆட்சியின் தவறுகளை அம்பலப்படுத்தப் பத்திரிகைகள் தவறிவிட்டன.''

**வியாபாரப் போட்டியில் தினகரன் மற்றும் சன்**

தொலைக்காட்சிக்கு எதிரான கோபம் தி.மு.க அணிக்கு எதிரான கோபமாக மாறிவிட்டதா?

"அதுபற்றி நான் ஒன்றும் சொல்ல விரும்பவில்லை."

**தனக்குப் போட்டி ஸ்டாலின்தான் என்ற தோற்றத்தை பிரசாரத்தில் உருவாக்கி வெற்றி கொள்ள நினைக்கிறார் ஜெ. என்கிறார்களே!**

"அது சுத்தமாக எடுபடாது. ஏனென்றால் யாரோடும் ஒப்பிட முடியாத அளவுக்கு அவர் சறுக்கிக் கொண்டிருக்கிறார். எங்கள் அணியில் தலைவர் டாக்டர் கலைஞர்... மே மூன்றாவது வாரத்தில் அவரே முதல்வர்."

**அ.தி.மு.க அணி - குறிப்பாக வைகோ - தங்கள் பிரசாரத்தில் கலைஞர் குடும்பத்தை மையப்படுத்துவார்கள் போலிருக்கிறதே!**

"ஆட்சியில் இருப்பவர்கள் மீண்டும் ஆட்சியைப் பிடிக்க முயற்சிக்கும்போது சாதனைகளைச் சொல்லித்தான் வோட்டுக் கேட்க வேண்டும். ஆனால் ஜெ. எந்தச் சாதனைகளைச் சொல்வார்? வேதனைப் பட்டியல்தான் நீள்கிறது. ஜெ. ஆட்சியை கடுமையாக விமர்சித்தவர் வைகோ. அவர் ஜெ.ஆட்சியை நியாயப்படுத்தினால் மக்கள் இடுப்பு வலிக்கச் சிரிப்பார்கள். எனவே நீங்கள் சொல்வதுபோல் பிரசாரம் செய்யக்கூடும். மக்கள் அவர் குற்றச்சாட்டுகளை அலட்சியப்படுத்தி விடுவார்கள். ஆனால் எங்கள் அணி, மத்திய அரசின் சாதனைகளைச் சொல்லி வோட்டுக் கேட்கும்."

**உங்களை அ.தி.மு.க அணிக்கு இழுக்க கடுமையான முயற்சி நடந்தது என்கிறார்களே... அது சரியா...?**

"ஆமாம்! அழைப்பு வந்தது. போலீஸ் ஒற்றர்கள் அனுப்பிய சிலர் வந்தார்கள். நான் போட்ட சத்தத்தில் ஓட்டப் பந்

தய வீரர்கள் போன்று திரும்பி ஓடியே விட்டார்கள்."

***129 இடங்களில் போட்டியிடும் தி.மு.க 118 இடங்களில் வெற்றி பெற்று தனி ஆட்சி நடத்தும் வாய்ப்பைப் பெறுமா? இல்லை கூட்டணி ஆட்சிதானா?***

"எப்படி பாராளுமன்ற தேர்தலில் 40க்கு 40 வென்றோமோ அதுபோல 234 சட்டமன்ற தொகுதிகளிலும் எங்கள் அணி வெற்றி பெறும். ஒரு இடத்தில்கூட அ.தி.மு.க ஜெயிக்காது. (உங்கள் டயரியில் நான் சொல்வதைக் குறித்து வைத்துக் கொள்ளுங்கள்' என்கிறார்) எனவே கூட்டணி ஆட்சி, ஆட்சியில் பங்கு என்ற கேள்விக்கெல்லாம் அவசியமில்லை."

***விஜயகாந்த் தனிக்கட்சி அமைத்துப் போட்டியிடுவது, ரஜினி ரசிகர்கள் ஒரு பகுதியினர் ஆளும் கட்சிக்கு ஆதரவு தெரிவிப்பது ஆகியவை எந்த அளவுக்கு உங்கள் அணியின் வெற்றியைப் பாதிக்கும்?***

"சிலரைப் பற்றிய கேள்விகளுக்குப் பதில் சொல்வதில்லை."

***அணி தாவுவதற்கு வசதியான வசனம் 'அரசியலில் நிரந்தர நண்பனும் இல்லை; விரோதியும் இல்லை' என்பது. அந்த வகையில் எதிர்காலத்தில் உங்கள் நிலைப்பாடும் மாறக் கூடும் அல்லவா?***

"1967லிருந்தே தமிழ்நாட்டில் அரசியல் கட்சிகள் கூட்டணி அமைத்துப் போட்டியிட்டு வருகின்றன. சரியாகச் சொல்வதானால் தொகுதி உடன்பாடு என்றுதான் சொல்ல வேண்டும். கூட்டணி இல்லாமல் தனி ஒரு கட்சி எல்லாத் தொகுதிகளிலும் போட்டியிட்டுப் பெரும்பான்மை வெற்றி பெறுவது சாத்தியமில்லை என்ற நிலையும் உருவாகி வருகிறது. ஒரு கூட்டணியில் வெற்றி பெறுபவர்கள் அடுத்த தேர்தலிலும் அதே கூட்டணியில் தொடர்ந்தால் மக்களின் நம்பிக்கையை, ஆதரவைப் பெறுவது சுலபமாக இருக்கும்."

**- ப்ரியன்**

படம்: **ராஜன்**

"அப்பா, அம்மா பாதையில்தான் பிள்ளைகளும் போக வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஆனால் கலை சார்ந்த குடும்பங்களில் மட்டும் பெற்றோரின் பாதிப்பு தவிர்க்க முடியாத விஷயமாகி விடுகிறது. அப்பாவின் இசை தமிழ் மக்கள் அல்லாதவர்களையும்கூட தீவிரமாகப் பாதித்திருக்கும்போது, அவர் உருவாக்கும் பாடல்கள் கருக்கொள்ளும் எங்கள் வீட்டில் பிறந்து வளர்ந்த நாங்கள் இன்னும் நேரடியாக, நெருக்கமாகப் பாதிக்கப்பட்டோம். தவிர்க்கவோ, தப்பிக்கவோ முடியாத பாதிப்பு இது" - திருமணத்துக்குப் பின் கணவர் சபரிராஜன் தரும் உற்சாகத்தோடு 'இலக்கணம்' படத்துக்கு இசையமைத்துக் கொண்டிருக்கும் பவதாரிணி பக்குவப்பட்ட பெண்ணாகப் பேசுகிறார்.

"பெற்றோர் பிரபலங்களாக இருந்தால், அதை வெளியே காட்டிக்கொள்ள விரும்பாதவர்களாகவே வாரிசுகள் இருப்பார்கள். நான் இந்த விஷயத்தில் கொஞ்சம் நேர்மாறான பெண். பள்ளி நாட்களில் தொடங்கி 'நான் இளையராஜாவின் மகள்' என்ற பெருமையை மனத்தில் நிறுத்திக்கொண்டே வளர்ந்திருக்கிறேன். கர்வத்தோடு பெருமை பேசியதில்லை. ஆனால் அவரது மகள் என்கிற நிஜமே, எனக்குள் எப்போதுமே கொப்பளித்துக் கொண்டிருக்கும் தன்னம்பிக்கைக்கும், உற்சாகத்துக்கும் காரணமாக இருக்கிறது. இசைக்கு மட்டுமல்ல, ஒரு மனிதன் எப்படித் தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும் என்பதற்கும் அவர் தான் எனக்கு ரோல் மாடல். அப்படிப்பட்ட அப்பாவின் மீது எனக்குக் கொஞ்சம் கோபமுண்டு. பள்ளி நாட்களில் உருவான கோபம் அது.

நினைவு தெரிய ஆரம்பித்தது முதலே இசை ஒலிகளால் நிறைந்திருக்கிறது எங்கள் வீடு. குழந்தைப் பருவத்தில், அம்மா நிறைய பொம்மைகளை எங்களுக்கு வாங்கிக் கொடுப்பார். ஐந்து நிமிடம்கூட அந்தப் பொம்மைகளின்மீது கவனம் இருக்காது. வீடு முழுவதும் நிறைந்திருக்கும் இசைக் கருவிகள், விளையாட்டுப் பொம்மைகளை விடவும் அதிகமாய் வசீகரித்தன. நான்கு வயது முதலே கர்நாடக இசை கற்றுக்கொள்ள அனுப்பி வைத்தார்கள். ஐந்து வயது முதல் வீணை.. ஆறாவது வயது முதல் பியானோ... அண்ணன் கார்த்திக் கிளாசிக்கல் வயலின் கற்றுக்கொண்டார். எல்லோருக்குமே கீபோர்டு மீது கவர்ச்சி இருந்தது. இந்த இடத்தில் டீ.வி. கோபாலகிருஷ்ணன், பிரபாவதி மிஸ், ஓ.எஸ். தியாகராஜன், தட்சிணாமூர்த்தி சுவாமி போன்ற எனக்குப் பயிற்றுவித்த இசை ஆசிரியர்களை நான் நினைவு கூர்கிறேன்.

பள்ளி நாட்களில், பள்ளிகளுக்கு இடையில் நடைபெறும் பாட்டுப் போட்டிகளில் கலந்துகொள்ள அதிக ஆர்வம் காட்டியிருக்கிறேன். நிறைய பரிசுகளையும் வாங்கியிருக்கிறேன். இளையராஜாவின் மகள் என்பதற்காக என்னைப் போட்டிக்குத் தேர்ந்தெடுக்கமாட்டார்கள். மற்ற போட்டியாளர்களைப் போல ஸ்ருதி தானத்தில் நன்றாகப் பாடினால் மட்டுமே வாய்ப்புக் கிடைக்கும். போட்டியில் வெற்றி பெற்று பரிசோடு வீட்டுக்கு வரும்போது பாராட்டுவதற்கு அம்மா மட்டும்தான் இருப்பார். அப்பாவிடமிருந்து

# "அப்பா மீது கோபமுண்டு!"

பாராட்டு கிடைக்காவிட்டாலும் பள்ளியில் நான் கலந்துகொள்ளும் போட்டிகளில் ஒன்றையாவது நேரில் வந்து பார்க்கமாட்டாரா என்று ஏங்கியிருக்கிறேன். அப்பா மீதான இந்தக் கோபமும்கூட ஸ்டுடியோவில் அவரைப் போய் நேரில் பார்க்கிறபோது மாயமாய் மறைந்து போய் விடும். அதைவிட அவரது இசையில் உருவான பாடல்களைப் பாடிக் கொண்டே இருக்கும்போது, அப்பா அருகில் இருப்பதைப் போன்ற உணர்வு நம்மைத் தழுவும்.

# தலைமுறைகள் 12



சிறு வயதில் அப்பாவுடைய மெட்டின் பின்னணியில் வரும் இசை ஒலிகளையும் வாயால் இசைக்க ஆரம்பித்து விடுவேன். நான் எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது நடந்த சம்பவம் இது. அக்னி நட்சத்திரம் படத்தில் இடம் பெற்றிருந்த 'ராஜா ராஜாதி ராஜன் இந்த ராஜா..' பாடலை கார்த்திக் அண்ணன் கீபோர்டில் வாசித்துக் கொண்டிருந்தார். உடனே அந்தப் பாடலில் வரும் பின்னணி இசையை அண்ணனுக்குப் பக்கத்தில்போய் உட்கார்ந்துகொண்டு வாயால் இசைக்க ஆரம்பித்தேன். இதை கவனித்துக் கொண்டிருந்த அப்பா, மைக்கை எனது கையில் கொடுத்து விட்டு மொத்த பாடலுக்கும் நான் செய்த வாய்ஜால இசையைக் கேட்டு ரசித்த பின்பு, முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டுப் போனார். ஒவ்வொரு நாளும் நாங்கள்

## பவதாரிணி இளையராஜா

கம்போஸ் செய்கிற ட்யூன்களை இரவு உணவு வேளையில் அவருக்குப் போட்டுக் காட்டுவோம். ஏதாவது தவறு இருந்தது என்றால் சுட்டிக் காட்டுவார். பின்னாளில் குறும்படங்களுக்கும், டி.வி. சீரியல் டைட்டில் பாடலுக்கும் இசையமைக்க இந்தப் பயிற்சியே எனக்குப் போதுமானதாக இருந்தது. ஆனால் முதல்முறையாக ரேவதி இயக்கிய 'மித்ரு மை ஃப்ரெண்ட்' படத்துக்கு இசையமைக்க ஒப்புக் கொண்டபோது ஒருபக்கம் சந்தோஷமாகவும் மற்றொரு பக்கம் மிரட்சியாகவும் இருந்தது. அதற்குக் காரணம் அப்பாவின் சாதனைகள்.

'அப்பா துறைக்கே நாமும் வருகிறோம். அவரது புகழுக்கும் அவர் படைத்திருக்கும் சாதனைகளுக்கும் கௌரவம் சேர்க்கும்விதமாக நாம் உழைத்தாக வேண்டும்' என்ற பயம் இருக்கவே செய்தது. நான் ஒவ்வொரு படத்தை ஏற்றுக்கொள்ளும் போதும் அந்தப் பயம் இன்னும் இருக்கவே இருக்கிறது. நல்ல வேளையாக அப்பாவின் வொர்க்கிங் ஸ்டைலையே நான் பின்பற்றுகிறேன். அதனால் நல்ல இசையைத் தரும் முயற்சியில் பின்தங்கி விடாமல் முன்னேறிக் கொண்டிருக்கிறேன்.

**எ**ங்கள் வீட்டில் எல்லோருமே ஆச்சர்யப்பட்ட ஒரு வரவு என்றால் தம்பி யுவனைத்தான் சொல்லுவேன். அவன் இசைப் பக்கம் வரமாட்டான் என்றுதான் எல்லோரும் நினைத்தோம். பத்தாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்த சமயம், 'ப்ளாஸ்ட்' என்ற ஆல்பத்தை இசையமைத்து உருவாக்கியபோது யுவனின் திறமை திடீரென்று வெளிப்பட்டது. அதன்பிறகு 'அரவிந்தன்' படத்தின் ட்ரைலர் காட்சிக்கு இசையமைக்கும் வாய்ப்பு. ட்ரைலர் இசை சேர்ப்பின்போது மொத்த ஆர்க்கெஸ்ட்ரா குழுவும் கைதட்டிப் பாராட்டுகிற மாதிரி முதல் முயற்சியிலேயே திறமையைக் காட்டியவன் யுவன். இன்று எங்கள் மூவரில் யுவனின் வேகமும், திறமையும் எங்களைப் பிரமிக்க வைக்கிறது.

எழுபது, எண்பதுகளில் தொடங்கி இன்றுவரை அப்பா இசையமைப்பில் வெளிவரும் பாடல்கள், இன்றைய இளைய தலைமுறையின் இசையமைப்பில் வெளிவரும் பாடல்கள் இரண்டுக்குமே எட்டாத வேறுபாடுகளைப் பார்க்கிறேன். இன்று மேற்கத்திய இசையின் தாக்கம், ஒரு நாகரிகம் என்பதுபோல ஆகிவிட்டது. யுவனிடமும் மேற்கத்திய இசையின் பாதிப்பு இருந்தாலும் அப்பாவின் அடையாளங்களை விட்டுவிட்டு அவன் இசையமைப்பதில்லை.

'மித்ரு மை ஃப்ரெண்ட்' படத்தில் ஆரம்பித்து நான் இசையமைத்த எல்லாப் படங்களுமே கருத்தாழம் மிக்க சீரியஸ் படங்கள். என்னாலும் ஆட்டம், பாட்டம், கொண்டாட்டம் மிக்க ஒரு இசையைத் தர முடியும். அதிலும் பாடல் வரிகளுக்கான முக்கியத்துவம் இழக்காமல் பார்த்துக்கொள்வேன். அதுபோன்ற ஒரு வாய்ப்புக்காகக் காத்திருக்கிறேன்."

**(நிறைந்தது)**

தொகுப்பு : **ஆர்.சி. ஜெயந்தன்**
படங்கள் : **ஸ்ரீஹரி, பப்பி**













Buy the third issue (April 15, 2006)
Find the coupon on page No:7
Fill it up neat and clear

Mail it to: Thd Editor, Gokulam Calibre Comics,
'KALKI Buildings',
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032
And
GET YOURSELF THE FIRST TWO ISSUES OF GCC (February 15, 2006 and March 15, 2006) ABSOLUTELY FREE! *

GOKULAM CALIBRE COMICS
For Wholesome Development...

* HURRY! only until stocks last!

# கொள்கை வேறு, கூட்டணி வேறு என்கிறார்களே...?

சேர்ந்துவிட்டனராமே?

! நிழல் நிஜமாகிறது!

● லெ.நா. சிவகுமார், சென்னை-33

? அனில் அம்பானி தமது மாநிலங்கள் அவை உறுப்பினர் பதவியை ராஜினாமா செய்துவிட்டது குறித்து...?

! யாரேனும் சுட்டிக் காட்டி விமர்சிப்பதற்கு முன் ராஜினாமா செய்தது அவரது இமேஜுக்கு மட்டுமின்றி ரிலையன்ஸின் இமேஜுக்கும் அதி முக்கியம். ஆனால், ராஜினாமாவுக்கு அவர் சொன்ன காரணம்தான் இன்றைய சூழலில் சொதப்பலாகிவிட்டது.

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி

? "நான் பணபலத்தை நம்புபவன் அல்ல - மக்கள் பலத்தை நம்புகிறவன்" எனக் கூறுகிறாரே விஜயகாந்த்?

! ரொம்ப சரி; பதிலுக்கு மக்கள் பலம் அவரை நம்ப வேண்டுமே!

● வி. ஜான்சிராணி, திண்டுக்கல்★

? மாசுக் கட்டுப்பாடைக் கண்காணிக்க தனி அமைப்பு இருக்கும்போது பிளாஸ்டிக் பேனர்/போஸ்டர்களை தேர்தல் ஆணையம் தடைசெய்தது சரியா?

❑ ரூ 100 பரிசு பெறுபவர்:
ஆர். ராஜதுரை,
97, பிடாரி வடக்கு வீதி,
சீர்காழி - 609 110

! சரிதான். மாசுக் கட்டுப்பாடு விதிகளையும் தேர்தல் பிரசாரத்தில் அமல்படுத்துவது தேர்தல் கமிஷனின் சமுதாய நோக்கு. தேர்தல் நடப்பதே சமுதாய நலன் கருதித்தானே...!

● செ. சத்தியசீலன், கிழவன்ஏரி

? வைகோ ஜெயலலிதாவைப் புகழ்வதற்கும் கராத்தே ஸ்டாலினைப் புகழ்வதற்கும் இடையில் உள்ள ஒற்றுமை - வேற்றுமை?

! முன்னது பிழைப்புக்காக; பின்னது பாதுகாப்புக்காக.



• இமேஜ் கருதி....

● ஆர். ராஜதுரை, சீர்காழி ❑

? ஆண்டுக்கு ரூ. நான்கு லட்சத்துக்கு மேல் வருமானம் உள்ள பிற்படுத்தப்பட்ட வகுப்பினருக்கு இட ஒதுக்கீடு சலுகைகளை ரத்து செய்ய ஆந்திர அரசு முடிவு செய்துள்ளது பற்றி...?

! நாலு லட்சம் என்பது அதிகம். குறைக்கலாம். எனினும் நல்ல ஆரம்பம். பிற மாநிலங்களும் பின்பற்ற வேண்டிய சிறந்த முடிவு.

● முருகேசன், தேனி

? 'மெர்க்குரி பூக்கள்' சினிமா பார்த்து மதுரையில் பிரிந்து வாழ்ந்த நான்கு ஜோடிகள் இப்போது ஒன்று



• பிழைப்பு ஓட....



• ... பிழைத்துக்கொள்ள

● கோவி இரவிச்சந்திரன், வரக்கால்பட்டு

? தி.மு.க கூட்டணியிலிருந்து விலகி அ.தி.மு.க வில் இணைந்திருக்கும் வைகோ, எப்போதும்போல் மத்திய

அரசுக்கு ஆதரவு அளித்துக் கொண்டிருப்பாராமே?

! 'பாலுக்கும் காவல்; பூனைக்கும் தோழன்' நிலைக்கு அவருடைய ஒன் பாயிண்ட் புரோகிராம் அவரைத் தள்ளிவிட்டது!



* இணைந்த பூக்கள்!

● கே. பெருமாள், கூனியூர்

? அ.தி.மு.க - தி.மு.க இரு கட்சிகளுமே ஊழல் கட்சிகள் என்று கூறும் விஜயகாந்த், 'ஆட்சியில் பங்கு தந்தால் கூட்டணிக்குத் தயார்' என்று கூறுவது ஊழலுடன் சேர்வதாகத்தானே அர்த்தம்?

! ஆட்சியில் பங்களிப்பு இருந்தால் ஊழலைக் கட்டுப்படுத்த முடியும் என்பது அவரது கணிப்பாக இருக்கலாம்.

* ரிப்பேரான கார்!

● ஆர். ஜெஸிந்த், ஏ.வி. கோட்டை

? கொள்கை வேறு, கூட்டணி வேறு என்கிறார்களே - ஒன்றும் புரியவில்லையே?

! கட்சிக்கு ஒரு தனித்தன்மை உருவாக்க கொள்கை. பதவி சுகம் கருதி அதை அடகு வைப்பது கூட்டணி.

● திலீப், திருச்சி.

? டெண்டுல்கரின் பொற்காலம் முடிந்துவிட்டதா?

! முடியும்வரை காத்திராமல் முடித்துக்கொள்வது புத்திசாலித்தனம். புத்தம் புதிய காருக்கும், இருமுறை விபத்துக்குள்ளாகி ரிப்பேர் செய்யப்பட்டுள்ள காருக்கும் இடையில் வித்தியாசம் உண்டு.

● ஆர்.எஸ். லக்ஷ்மி, கோவை - 41

? அமெரிக்கா மட்டும் இல்லை என்றால் முஸ்லிம் தீவிரவாதிகளின் அராஜகம் கட்டுக்கடங்காமல் கைமீறிப் போய்விடும் என்பதுதானே யதார்த்த உண்மை? இதில் கல்கி ஒருபட்சமாக இருப்பது போல் தெரிகிறதே?

! முஸ்லிம் தீவிரவாதத்தை அமெரிக்கா மட்டுமென்ன, உலகமே எதிர்த்துக் குரல் கொடுக்கிறது. அமெரிக்காவின் அணுகுமுறைதான் சரியில்லை. அதன் போக்கு காரணமாகத்தான் முஸ்லிம் தீவிரவாதம் கட்டுக்கடங்காமல் பெருகுகிறது என்பதே நம் கருத்து.

★ ரூ 50 பரிசு பெறுபவர்:

வி. ஜான்ஸி ராணி,
1/824, எஸ்.எஸ். நகர்,
திண்டுக்கல் - 624 003

● ஜி. ஜெயராமன், கூந்தலூர்

? கிரஹாம்பெல் இப்போது இருந்தால் மொபைல் போன்களைப் பார்த்து என்ன நினைப்பார்?

! தாம் போட்ட அஸ்திவாரம் குறித்துப் பெருமைப்பட்டிருப்பார். ○

## நீங்கள் கேட்டவை

## - தராசு




# கல்கி



2006 ஏப்ரல் 9
பார்த்திப பங்குனி 26
மலர் : 64
இதழ் : 36


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

## ராஜினாமா நாடகம்!

மறுபடியும் மக்கள் அனுதாபத்தைப் பெற்றுவிட்டார் சோனியா காந்தி! ஆனால், பிரதமர் பதவியை நிராகரித்தபோது அவர் செயலில் இருந்த நேர்மை இப்போது இல்லை. 'ஆதாயம் தரும் பதவி' விவகாரத்தில் எதிர்கட்சிகள் தம் மீது பழி சுமத்த வலுவான காரணம் உள்ளது என்ற நெருக்கடி ஏற்பட்ட பிறகே அவர் ராஜினாமாவை அறிவித்தார். முன்னதாக, இந்த விவகாரம் குறித்த விவாதத்தை எதிர்கட்சிகள் நாடாளுமன்றத்தில் எழுப்ப முற்படுவது தெரிய வந்ததும், அவசர அவசரமாக நாடாளுமன்ற கூட்டத் தொடர், கால வரம்பு குறிப்பிடாமல் ஒத்தி வைக்கப்பட்டது. சோனியாவைப் பாதுகாக்கவே இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது என்பதை எதிர்கட்சிகள் உடைத்துரைத்து எதிர்ப்பு தெரிவிக்க முற்படும் கட்டத்தில்தான் அவர் ராஜினாமா செய்தார்! சோனியாவைக் காப்பாற்ற அவசரச் சட்டம் பிறப்பிக்கவும் மத்திய அரசு திட்டமிட்டிருந்தது.

எனவே, இது தார்மிக அடிப்படையிலான ராஜினாமா அல்ல. அவ்வாறு தவறை உணர்ந்து ராஜினாமா செய்வதாயின் நாடாளுமன்ற கூட்டத் தொடரை திடீரென்று ஒத்திவைக்காமல், அவசரச் சட்டம் பிறப்பிக்க முற்படாமல், தாம் 'இரு பதவிகள் வகிப்பது சட்டப்படி தவறு' என்று சோனியா ஏற்றுக்கொண்டு ராஜினாமா









செய்திருக்கலாம். ஜெயா பச்சன் விவகாரத்தில் ஒரு சட்டரீதியான தெளிவு பிறந்தவுடனேயே அவர் ராஜினாமா செய்திருந்தால் அதை தார்மிக அடிப்படையிலான ராஜினாமா என்று நாம் மகிழ்ந்து ஏற்றிருக்கலாம். ஆனால், அவரோ காலம் தாழ்த்தி ராஜினாமா செய்ததுமல்லாமல் உடனே தேர்தல் பிரசாரத்தையும் ஆரம்பித்துவிட்டார். தமது ரேபரேலி தொகுதி மக்களிடம் சென்று, எதிர்கட்சியினர் தமக்கு இழைக்கும் கொடுமைகள் பற்றி விரிவாகப் பேசி, அவர்களுடைய அனுதாபத்தைப் பெற முயன்றிருக்கிறார். அவர்களும் அந்த நாடகத்தின் உட்பொருளை உணர்ந்தோ, உணராமலோ பல்லாயிரக் கணக்கில் திரண்டு வந்ததன் மூலம் தலைவிக்கு ஆதரவு தெரிவித்துள்ளனர்.

எளிய மக்களை ஏமாற்றும் இந்த நாடகம் ஒருபுறமிருக்கட்டும்... 'ஆதாயம் தரும் பதவி' விவகாரத்தை மிகக் கோபத்துடன் கிளப்பிய பா.ஜ.க. முதலான எதிர்கட்சியினர் இப்போது அந்தச் சட்டத்தையே திருத்துவதற்கான ஆலோசனைகளில் ஈடுபட்டுள்ளனர். அனைத்துக் கட்சிகளிலும் 'ஆதாயம் தரும் பதவி' வகிக்கும் எம்.பி.க்கள், எம்.எல்.ஏ.க்கள் உள்ளனரே! ஆகவே, இந்த விவகாரத்தைப் பொறுத்தவரையில் அனைத்து அரசியல்வாதிகளும் சட்டத் திருத்தத்தையே விரும்புவார்கள்; ஒன்றுபட்டு அதனை நிகழ்த்தியும் விடலாம். பி.ஜே.பி. ஆளும் ஜார்கண்ட் மாநிலத்தில் ஏற்கெனவே இதற்கான சட்டத்திருத்தம் நிறைவேற்றப்பட்டுவிட்டது.

இவ்வாறு அரசியல்வாதிகள் தங்கள் வசதிக்கும் ஆதாயத்துக்கும் ஏற்ப சட்டத்தை மாற்றிக்கொண்டு போவது சுலபம்; சட்டத்துக்கு உட்பட்டு நடப்பதுதான் கஷ்டம். அதுதான் பெருமை தரும்.

சட்டங்களை உருவாக்கிய மேதைகள், தேசபக்தர்கள் எதற்காக யோசித்து யோசித்து இந்தச் சட்டங்களை இயற்றினார்கள் என்று சிந்திப்பதற்குப் பதிலாக அவற்றை மாற்ற முற்படும்போது, அரசியல்வாதிகள் மக்கள் முகத்தில் கரி பூசுகிறார்கள்; தங்கள்மீதே சேற்றை வாரி இறைத்துக் கொள்கிறார்கள். ●

"நான்கு சீடர்கள், தங்களுக்குள் விவாதம் செய்துகொண்டு இருந்தபோது, அவர்களுடைய குரு அங்கே வந்தார். அவர்களுக்கு நடுவில் ஒரு பானையைக் கவிழ்த்து வைத்துவிட்டு, 'இதன் உள்ளே என்ன இருக்கிறது?' என்று கேட்டார்.

முதல் சீடன், 'தெரியாது' என்றான். இரண்டாவது சீடனும் 'தெரியாது' என்றான். மூன்றாமவன், பானைக்குள் கையை விட்டுத் துழாவிப் பார்த்துவிட்டு, 'ஒன்றுமில்லை' என்றான். நான்காவது சீடன், 'பானைக்குள்ளே காற்று இருக்கிறது' என்றான்.

குரு, அடுத்து ஒரு கேள்வி கேட்டார். 'பானைக்குள் இருக்கும் காற்றை வெளியில் எடுக்க முடியுமா?' முதல் சீடன் சொன்னான். 'முடியாது.' இரண்டாவது சீடன், 'காற்றை வெளியே எடுப்பது சாத்தியமில்லை' என்றான். மூன்றாவது சீடனும் 'முடியாது' என்றான். நான்காவது சீடன், தண்ணீரால் அந்தப் பானையை நிரப்பிவிட்டு, 'இப்போது, பானையினுள் இருந்த காற்றை வெளியில் எடுத்தாகிவிட்டது' என்றான்.

முகம் மலர்ந்தார் குரு. நம் மனதும் பானை போலத்தான். அதில் தேங்கியுள்ள கெட்டவற்றை வெளியில் எடுக்க முடியாது. ஆனால், நல்லவற்றைக் கொண்டு மனதினை நிரப்ப, நிரப்ப, கெட்டவை தானே வெளியேறிவிடும்!"

- இது அண்மையில் இயற்கை எய்திய வேதாத்ரி மகரிஷி சொன்ன அர்த்தம் பொதிந்த குட்டிக்கதை. இல்லறத்தில் ஈடுபட்டுக் கொண்டே இறை உணர்வைத் தேட முடியும் என்று லட்சக்கணக்கான சாதாரண மக்களுக்கு வழிகாட்டிய மகான். 'வாழ்க வளமுடன்!' 'வாழ்க வையகம்!' என்கிற வாசகத்தின் மூலம் உலகமெங்கும் பாசிடிவ் அதிர்வுகளைப் பரப்பியவர். 'சன்மார்க்கம், ஜோதி வழிபாடு, ஜீவகாருண்யம்' என்ற வள்ளலாரின் வழிவந்தவர்.

கோவை மாவட்டம் பொள்ளாச்சியை அடுத்த ஆழியாறில், அறிவுத் திருக்கோவிலை நிறுவி, 'வாழ்க்கையில் மகிழ்ச்சியும், வெற்றியும் வேண்டுமெனில், உடல்நலம் இன்றியமையாதது' என்று வலியுறுத்திய வேதாத்ரி மகரிஷி, எட்டு வயது முதல் எண்பது வயதினர் வரை எளிதில் பயின்று, பயன்பெறத்தக்க உடற்பயிற்சி முறையொன்றை உருவாக்கி, கடந்த 50 ஆண்டுகளாக, கற்பித்து வந்தார்.

"அணு சக்தியின் விளைவுகளைப் பற்றி, 1957லேயே உலகை எச்சரித்து 'அணுவிஷம்' என்று ஒரு நாடகம் எழுதினார். அந்த நாடகத்தை, தற்காலச் சூழலுக்கு ஏற்ப மாற்றி எழுதி, மேடையேற்றும் வாய்ப்பு எங்களுக்குக் கிடைத்தது. ஐம்பது வருடங்களுக்கு முன் எழுதப்பட்ட கரடுமுரடான விஷயத்தை தற்கால மக்கள் விரும்பும் வகையில் எப்படி எழுதுவது என்று குழம்பிப் போனேன். இரவு பத்துமணிக்கு மேஜை மீது வேதாத்ரி மகரிஷியின் படத்தை வைத்து தியானம் செய்துவிட்டு எழுத ஆரம்பித்தேன். இரவு முழுக்க எழுதினேன். விடிந்தபோது, பாதி வேலை முடிந்துவிட்டது. மறுநாள் இரவில் மீதியை எழுதி முடித்துவிட்டேன். எழுதியதைப் படித்துப் பார்த்தபோது, 'இதை எல்லாம் நானா எழுதினேன்' என்ற பிரமிப்பு ஏற்பட்டது. நாடகம் ஆழியாறில் அரங்கேறியது. மகரிஷி பாராட்டி ஆசி வழங்கினார்" என்று நெகிழ்வுடன் நினைவு கூர்கிறார் குருகுலம் நாடகக் குழுவின், எம்.பி. மூர்த்தி.

**- எஸ். சந்திரமௌலி**



# வாழ்க வளமுடன்!

-கிருஷாங்கினி



# காற்றற்ற போதிலும்...

- வளர்ந்து வரும் புழு அசைந்து
இன்றோ அதுவுமற்று, கூட்டில்
சிறையில் மரண உறக்கம்
என்றெண்ணி விடலாகாது
இது பறத்தலில் விஸ்தரிப்பு
வண்ணம் கொண்டு உந்திப்
பறக்க முன்னதான எத்தனிப்பு

- அரசின் தானியக் கிடங்கு
அருகில் என் வீடு
இடைவிடாத வாகன ஓட்டம்
மாத முதலில், கடைசியில்
காலியாகவும் தானியச் சுமையுடனும்
விடியற்கருக்கலின் வாகனமற்ற
நிசப்தத் தெருவில்
பசியாறுகின்றன தானியம் கொத்தி
காக்கைகளும் மற்ற சிறு
பறவைகளும்

- புழங்கும் நிலமெங்கும்
மனித வாடையின்
அடையாளமாய்
பல்பொருள் பிளாஸ்டிக்
நாரையைப் போல ஒத்தைக்
குச்சியின்
உச்சியில் சலசலக்கும்
வந்த பறவை விரட்டும்
உடையவன் பயிர் காக்கும்
காற்றின் சுழற்சியிலும்
காற்றற்ற போதிலும்



வைத்தால் நான் ஓடிப் போக வேண்டியது தான்; கல்யாணத்துக்கு இருக்க மாட்டேன்'' என்றார்.

அந்தப் பழைய பிரம்ம ராக்ஷஸன் கதையையும் சொன்னார். ஒரு மரத்தில் ஒரு பிரம்ம ராக்ஷஸன் இருந்தான். அந்த மரத்துக்குக் கொஞ்ச தூரத்தில் ஒரு கோயில் இருந்தது. அதில் ஒரு நாதசுரக்காரன் தினம் வாத்தியம் வாசிப்பான். அபஸ்வரக் களஞ்சியமான அவனுடைய வாசிப்பைக் கேட்டு அந்த பிரம்ம ராக்ஷஸன் துடியாய்த் துடிப்பான்.

பிரம்ம ராக்ஷஸனுக்கு ஒரு சாபம். அந்த மரம் விழுகிற வரையில் அவன் அதிலேயே தலைகீழாய்த் தொங்க வேண்டும். மரம் விழுந்தால் எங்கேயாவது போகலாம்; யாரையாவது பிடித்துக் கொள்ளலாம்.

ஒருநாள் ஓர் ஏழைப் பிராமணன் அந்த மரத்தில் நிழலுக்குத் தங்கினான். "ஓ! பிராமணா! எனக்கு ஓர் உபகாரம் செய்தால் உன் தரித்திரம் நீங்க வழி சொல்கிறேன்" என்றான் பிரம்ம ராக்ஷஸன்.

பிராமணன் உளறி அடித்துக் கொண்டு எழுந்திருந்தான். பிறகு சமாளித்துக்கொண்டு, ''என்ன உபகாரம் செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

''உங்கள் ஊர் மேளக்காரனுடைய வாசிப்பை என்னால் கேட்க முடியவில்லை. சித்திரவதையாயிருக்கிறது. இந்த மரத்தை வெட்டித் தள்ளிவிடு. நான் ஓடிப் போகிறேன்'' என்றான்.

பிராமணன் அப்படியே செய்தான். பிரம்ம ராக்ஷஸன் போகும்போது, "நான் அங்க தேசத்து ராஜாவின் பெண்ணைப்

ஸ்ரீமான் புருஷோத்தம அய்யருக்கும் அவருடைய மனைவிக்கும், அவர்களுடைய குமாரியின் வளைகாப்புக் கலியாணத்துக்கு மேளக்கச்சேரி வைப்பதைப் பற்றி அபிப்பிராய பேதம் ஏற்பட்டது.

"நன்றாயிருக்கிறது; மேளம் இல்லாமல் கலியாணமா? கட்டாயம் மேளம் வைத்துத்தான் ஆகவேண்டும்'' என்றாள் அம்மாள்.

''முடியவே முடியாது'' என்றார் அய்யர். அப்படி அவர் சொன்னதற்குக் காரணம், அவர் கொஞ்சம் சங்கீத ரஸிகராயிருந்ததுதான். "இந்த ஊரில் நல்ல மேளக்காரன் கிடையாது. சங்கீதத்தைக் கொலை செய்பவர்கள்தான் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவனை

போய்ப் பிடித்துக் கொள்கிறேன். நீ வந்தாயானால் உடனே ஓடிப்போய் விடுகிறேன். ராஜா உனக்கு வேண்டிய சன்மானம் செய்வான். ஆனால் ஜாக்கிரதை! ஒரே ஒரு தடவைதான் உன்னைப் பார்த்ததும் ஓடுவேன். இன்னொரு தடவை வந்தால் அறைந்து கொன்று விடுவேன்" என்றான்.

அந்தப் படியே அங்க தேசத்து ராஜாவின் பெண்ணைப் பிடித்திருந்த பிரம்ம ராக்ஷஸனை ஓட்டி, பிராமணன் பணக்காரன் ஆனான். பிறகு பிரம்ம ராக்ஷஸன் வங்க தேசத்து ராஜகுமாரியைப் பிடித்தான். வங்க நாட்டு ராஜா, அங்க தேசத்து ராஜாவுக்கு, அந்தப் பிராமணனை அனுப்பும்படி ஓலை விடுத்தான். பிராமணன் எவ்வளவோ தடுத்துச் சொல்லியும் கேளாமல், அவனை ராஜகுமாரியிடம் கொண்டு போனார்கள்.

"அடே! பிராமணா! என் பேச்சை மீறி மறுபடியும் வந்தாயா?" என்று பிரம்ம ராக்ஷஸன் பிடித்த அந்த ராஜகுமாரி இரைந்து, கையை ஓங்கி அறைய வந்தாள்.

"ஐயோ! இல்லை! நான் வந்தது வேறு விஷயம். அந்த மேளக்காரன் வந்திருக்கிறான் இந்த ஊருக்கு. அதைச் சொல்லத்தான் வந்தேன்" என்றான் பிராமணன்.

"ஐயையோ!" என்று அலறிவிட்டு பிரம்ம ராக்ஷஸன் ராஜகுமாரியை விட்டு ஓடிப்போனான்.

**ஸ்ரீ**மான் புருஷோத்தம அய்யர் மேற்படி கதையைச் சொல்லிவிட்டு, "அந்த மாதிரியே நானும் ஓடிப் போவேன், இந்த ஊர் மேளக்காரனை வைத்தால்" என்றார்.

"அப்படியென்றால், நீங்களும் பிரம்ம ராக்ஷஸனா, என்ன?" என்றாள் அவர் மனைவி. இவருக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. இந்த ஊர் மேளம் பிடிக்காவிட்டால், வேறு எந்த ஊர் மேளமாவது வையுங்கள். மேளம் கட்டாயம் வைத்தாக வேண்டும்" என்று அம்மாள் உத்தரவு போட்டாள்.

அந்த உத்தரவை மீறுவதே அசாத்தியம். பின் என்ன செய்வது? புருஷோத்தம அய்யருக்கு ஒரு யோசனை தோன்றிற்று.

"சரி, உன் இஷ்டம் போல் செய்வோம். திருவாவடுதுறை ராஜரத்தினத்தின் மேளக் கச்சேரியை வைத்து விடுவோம்!" என்றார்.

அய்யர் கலியாணத்துக்கு மொத்தம் போட்டிருந்த செலவுத் திட்டமே ரூ.200தான். திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையை எப்படி வரவழைக்க முடியும்? அவர் கையாண்ட யுக்தி இதுதான். கையில் ரூ.20 எடுத்துக் கொண்டு கிராமபோன் கம்பெனிக்குப் போனார். ஸ்ரீமான் ராஜரத்தினம் பிள்ளையின் இரண்டு கச்சேரி ஸெட் பிளேட்டுகளையும் வாங்கிக்கொண்டு வந்தார். கலியாணத்தன்று முதல் தரமான நாதஸ்வரக் கச்சேரி சக்கைப் போடாக நடந்தது. அவருடைய மனைவிக்கும் மனக்குறை இல்லை. அவருக்கும் அபஸ்வரத்துக்குப் பயந்து ஓட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

ஸ்ரீமான் புருஷோத்தம அய்யர் கையாண்ட முறையை நேயர்கள் எல்லாருக்கும் நான் சிபாரிசு செய்கிறேன்.

**- 'கல்கி களஞ்சியம்' புத்தகத்திலிருந்து... வானதி பதிப்பகம்**




# மேளக்காரன் கதை!

# அடுத்த கட்டம் நோக்கி...

சுஜாதா

சென்ற கட்டுரையில் டெக்ஸ்லரின் மாலிக்யுலர் கம்ப்யூட்டர் பற்றிக் குறிப்பிட்டோம். ஃபோட்டோ லித்தோகிராஃபி போன்று ஃபிலிமில் கோடு வரையும் தொழில்நுட்பங்கள் மைக்ரான் அளவில் அதாவது ஆயிரம் நானோ மீட்டர் அளவில் இயங்குகின்றன. மேலும் அவை ஏராளமான எலக்ட்ரான்களை இடம்பெயர்க்கும் அளவில்தான் நுட்பமடைந்திருக்கின்றன. மாலிக்யுலர் டெக்னாலஜி என்பது தனித்தனி எலக்ட்ரான்களையும் மாலிக்யுல்களையும் 10 நானோ மீட்டர் அளவில் நம் விருப்பப்படி



கட்டுப்படுத்துவது. இதற்கான தொழில்நுட்பம் இன்று நம்மிடம் இல்லையெனினும் சரியான கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டால் இது சாத்தியமே என்று விஞ்ஞானிகள் கருதுகிறார்கள். விஞ்ஞானிகள் இந்தப் பணியை டெக்னாலஜிஸ்டுகளிடம் கொடுக்கும் முன், ஐ.பி.எம். போன்ற ஆராய்ச்சி சாலைகளில் புதிய கருவிகளைக் கண்டுபிடிப்பதில் முனைப்பாக இருக்கிறார்கள்.

டெக்னாலஜிஸ்டுகள் கேட்பதெல்லாம் இதுதான். நீ என்ன கண்டுபிடித்தாலும் அது திரும்பத் திரும்ப செய்யக் கூடியதாக இருக்க வேண்டும். அதாவது இயற்பியல் விதிகளுடன் மோதக்கூடாது. இயற்கைக்கு எதிராக நாங்கள் எதுவும் செய்ய முடியாது. மேலும் எந்தத் தொழில்நுட்பமும் செலவினத்தில் கட்டுப்படியாகும்படி இருக்க வேண்டும். விஞ்ஞானப்படி ஈயத்தை தங்கமாக்கலாம். கரியை வைரமாக்கலாம். ஆனால் செலவு?



படம்: ஸ்ரீஹரி

அலுமினியம் முதலில் கண்டுபிடிக்கப்பட்டபோது அதை உற்பத்தி செய்யும் எலக்ட்ராலிசிஸ் முறைகள் வெளிவரவில்லை. அப்போது அலுமினியம் தங்கத்தைவிட விலை அதிகமாக இருந்தது. அறிவியல் அறிவு தொழில்நுட்பமாக மாறுவதற்கு முதல் தேவை பொருளாதார சிக்கனம்.

மாலிக்யுலர் கம்ப்யூட்டிங்குக்குத் தேவை தனிப்பட்ட மாலிக்யுல்களை இஷ்டப்பட்ட இடத்தில் வைத்துக் கட்டடம் கட்டுவது. இது இயற்பியல் விதி

களுடன் மோதாது என்பது மட்டும் உறுதியாகியிருக்கிறது. இதை எப்படி எளிய முறையில் செய்வது என்பதுதான் இன்றைய பிரச்னை.

மாலிக்யுலர் கம்ப்யூட்டிங் என்பது என்ன என்பதை இன்னும் கொஞ்சம் விவரமாகப் பார்ப்போம். இன்றைய உற்பத்தி தொழில்நுட்பத்தில் நாம் பயன்படுத்தும் முறைகள் எவ்வெவை? வெட்டுவது, துளைபோடுவது, தேய்ப்பது, சமன்படுத்துவது போன்றவைதான். கம்ப்யூட்டர் சில்லுகளின் தயாரிப்பிலும் இதைத்தான் சிறிய பரப்பில் செய்கிறோம். ஒல்லியான சிலிக்கான் வேஃபர்களை கம்ப்யூட்டர் சில்லுகளாக்குகிறோம். இவையனைத்திலும் உள்ள நுட்பத்தை, நுட்பமாகக் கவனித்தால் நாம் செய்வதெல்லாம் முரட்டு வேலை என்பது புரியும். அதி அதி நுட்பமான ஒரு பொருளைத் தயாரிக்கும் போதுகூட அதன் மாலிக்யுல்களை பல்லாயிரக்கணக்கில் ஆட்டுமந்தை போல் நகர்த்துகிறோம். மாறாக, இயற்பியலில் வேதியியலில் பல உதாரணங்கள் உள்ளன. ஒரு ப்ரோட்டின் மாலிக்யுலின் உற்பத்தியில் உள்ள ஒழுங்கை நோக்கும்போது பிரமிப்பு ஏற்படும். அதன் மிக நீண்ட மாலிக்யுல் அமைப்பில் எழுத்துப் பிழை ஏதும் நேராது. லட்சக்கணக்கில் திரும்பத் திரும்ப ஒரு தேர்ந்த ராணுவ வீரர்களின் அணி வகுப்புபோல அவை இயங்குகின்றன. இயற்கையில் உள்ள விந்தைகள் எல்லாம் இந்த ஒழுங்கின் அடிப்படையில் அமைந்தவை. ஒரு கரித்துண்டுக்கும் வைரத்துக்கும் உள்ள வேறுபாடு, இந்த மாலிக்யுலர் ஒழுங்குதான். இதுதான் வைரத்துக்கு அத்தனை வலிமையைக் கொடுக்கிறது. அத்தனை பளபளப்பையும் கொடுக்கிறது. இந்த ஒழுங்கு பல ஸ்படிகங்களுக்கு உண்டு. அவற்றின் அணுக்கட்டடம் பிழையில்லாமல், ஒன்றைப் பார்த்தால் மற்றதைப் பார்க்க வேண்டாம். அப்படி இருக்கும்.

இந்த ஒழுங்கமைப்பை எப்படியாவது கம்ப்யூட்டர் தயாரிப்பில் கொண்டு வந்து



விட்டால் அதில் உள்ள 'கன்னா பின்னாத்தனம்' (randomness) நீங்கும்போது ஒரு சிறிய இடத்தில் நிறைய செய்திகள் சேர்க்க முடியும். நிறைய செயல்திறன்களை அமைக்க முடியும். இதுதான் மாலிக்யுலர் கம்ப்யூட்டிங்கின் ஆதார தத்துவம். இன்றைய கம்ப்யூட்டர் சில்லுகளின் தொழில்நுட்பமான ஃபோட்டோ லித்தோகிராஃபி. இன்னும் பத்து வருஷத்துக்குள் அதன் சாத்திய எல்லையை எட்டிவிடும் என்கிறார்கள். அடுத்த கட்டமாக மாலிக்யுலர் முறைகளைத்தான் நாட வேண்டும் என்கிறார்கள். ஒரு கம்ப்யூட்டர் என்பது ஒரு தனிப்பட்ட மாலிக்யுல் அமைப் பல்ல. இன்றைய தினங்களில் வைரத்தை குறைந்த அழுத்தம், குறைந்த உஷ்ண சூழ் நிலையில் சோதனைச்சாலையில் உற்பத்தி செய்ய CVD போன்ற வேப்பர் டெபாசிஷன் ஆவி படிய வைக்கும் முறைகள் உள்ளன. இதன் மூலம் வைரத்தை உற்பத்தி செய்ய முடியும். ஆனால் வைர கம்ப்யூட்டரை அல்ல. அது திரும்பத் திரும்ப ஒரே கட்டட அமைப்புள்ளதாக இருக்க முடியாது. பல இடங்களில் அமைப்பை மாற்ற வேண்டியிருக்கும். அப்போதுதான் அது கம்ப்யூட்டர் சில்லாகும். விரும்பிய ஸ்தலத்தில் விரும்பிய படி மாலிக்யூலர் அமைப்பை மாற்றக்கூடிய கருவிகளை ஆராய்ந்து கொண்டிருக்கிறார்கள். அவற்றை பொசிஷனல் கண்ட்ரோல் – இருப்பிடக் கட்டுப்பாட்டு கருவி என்கிறார்கள். இந்தக் கருவி சீரமைக்கப்பட்டால் மாலிக்யுலர் கம்ப்யூட்டிங்கில் அடுத்த கட்டத்தை அடைவார்கள். இன்றைய கம்ப்யூட்டர் சில்லுகளைவிட பல்லாயிரம் மடங்கு அடர்த்தியும் திறமையும் கொண்டவையாக இந்த நானோ கம்ப்யூட்டர்கள் இருக்கும்.

எதிர்காலத்தில் நானோ டெக்னாலஜி எத்திசையில் செல்லும், எந்த இயலில் வெல்லும் என்றறியாத நிலையில் இன்றைய தினத்தில் ஐ.பி.எம்., எக்ஸான் போன்ற பெரிய கம்பெனிகள்தான் இதில் முதலீடு செய்து கொண்டிருக்கின்றன. ஐ.பி.எம். கம்ப்யூட்டர் தகவல்களைச் சேகரிக்கும் சாதனங்களின் அடர்த்தியை அதிகரிப்பது நானோடெக் மூலம் சாத்தியம் என்று நம்பிச் செலவழிக்கிறது.

எக்ஸான் போன்ற கம்பெனிகள் பெட்ரோலியத் தயாரிப்பில் பயன்படும் 'காட்டலிஸ்ட்' ஊக்கிகளை நானோடெக் மூலம் தயாரிப்பதில் கவனம் செலுத்துகிறது. இதனுடன் 'கார்பன் நானோ டெக்' போன்ற சிறு நிறுவனங்கள் எதிர்காலத்தில் எதற்காவது பயன்படும் என்ற நம்பிக்கையில் 'கார்பன் நானோ ட்யூப்'களைத் தயாரிப்பதில் முதலீடு செய்திருக்கின்றன. நானோ ட்யூப்ஸ், க்வாண்டம் புள்ளிகள் எல்லாம் எதிர்காலம் சார்ந்த சாத்தியங்கள். இவை பற்றித் தனியாக ஒரு கட்டுரையில் சொல்கிறேன்.

(விந்தை தொடரும்)



"நம்ம கட்சித் தலைவருக்கு டாக்டர் பட்டம் கொடுத்தது தப்பா போச்சு!"
"ஏண்டா?"
"நேத்து மூணு பேரை அறுவை சிகிச்சைங்கற பேருல வெட்டிக் கொன்னுட்டாரே!"
- ப.வினோத்ராஜா

# "இந்தியர்கள் யாருக்கும் குறைஞ்சவங்க இல்ல!"

**டேபிள் டென்னிஸில் இந்தியாவின் முதல் நிலை வீரரான இருபத்து மூன்று வயது ஷரத் கமல், சமீபத்தில் முடிவடைந்த காமன்வெல்த் போட்டியில் இரண்டு தங்கங்களை சொல்லி வைத்து அடித்திருக்கிறார். ஆஸ்திரேலியாவிலிருந்து கிளம்பும்முன் நம்மிடம் பேசினார்...**

**சிங்கிள்ஸ் ஃபைனல்ஸ் எப்படி இருந்தது?**

"என்னோடு மோதிய வில்லியம் ரெண்டு வருஷத்துக்கு முன்னாடி பூனையாட்டம் இருந்தாரு. ஆனா இந்தமுறை புலிப் பாய்ச்சல். அதான் ஏழு செட் வரை மேட்ச் இழுத்திருச்சு. கடந்த ரெண்டு காமன்வெல்த் போட்டிகள்லயும் நான்தான் ராஜா. அடுத்து உலக அரங்குல இதேபோல் ஜெயிக்கணும். என் அடுத்த இலக்கு 2008 பீஜிங் ஒலிம்பிக்ஸ்."

**சீனர்களையும் ஐரோப்பியர்களையும் தோற்கடிப்பது சிரமமாச்சே?**

"சீனர்கள் மெஷின் மாதிரி விளையாடு வாங்க. பிழைகள் குறைச்சலா இருக்கும். அறிவியல்பூர்வமா பயிற்சி எடுப்பாங்க. எப்படி ஆடினா ஜெயிக்கணும்ங்கிற வித்தை நல்லா தெரியும் அவங்களுக்கு. இந்தியர்கள் யாருக்கும் குறைஞ்சவங்க இல்லை. நானும் அவங்களுக்குச் சமமா வெளிநாடுகள்ல நிறைய பயிற்சிகள் எடுத்துட்டு வர்றேன். கூடவே அப்பாவும் (ஸ்ரீனிவாசராவ்) மாமாவும் (முரளிதரராவ்) எனக்கு கோச்சா இருக்கும் போது யாருக்கும் பயப்பட வேண்டியதில்லை."

**இந்தியர்கள் சர்வதேச அரங்கில் ஜெயிக்கத் தேவை யானவை?**

"நாம் வெளிநாட்டிலுள்ள வசதி வாய்ப்புகளை அண்ணாந்து பார்க்கக்கூடாது. இதுவே நம் தன்னம்பிக்கையைக் குறைச்சிடும். என்னால முடியும்ங்கிற சிந்தனை இருந்தாலே பாதி மேட்ச் ஜெயிச்ச மாதிரிதான். நான் இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன்ல வேலை பார்த்துட்டே விளை யாட்டிலேயும் கவனம் செலுத்தறேன். ஆனா நிறைய பேர் விளையாட்டை பாதியிலேயே விட்டு ஒரேயடியா வேலையில் செட்டில் ஆயிடறாங்க. வெளிநாட்டுக்குப் போய் ஆடறதுக்காக பாக்கெட்டி லிருந்து நிறைய செலவழிக்க வேண்டியிருக்கு. நிதிவசதியும் ஏற்படுத்தித் தரணும்."

**கிரிக்கெட், டென்னிஸ் மாதிரி டேபிள் டென்னிஸ் பிரபலமாகலையே?**

"பொதுவாவே விளை யாட்டுக்கு இங்க முக்கியத் துவமில்லை. டேபிள்



டென்னிஸ் ஆட்டத்தைப் புரிஞ்சுக்கறதும் கஷ்டம்தான். இதனால ரசிகர்களுக்கும் ஆர்வம் இல்லாமப் போயிடுச்சு. ஆனா காமன் வெல்த் நடந்த ஆஸ்திரேலி யாவுல நல்ல கூட்டம் வந்துச்சு. ஏதோ இந்தியாவுல ஆடற உணர்வு இருந்தது!"

**- ச.ந.கண்ணன்**

அம்மாவிடம்தான் பூஜா முழு நேரமும் இருக்கிறாள். இப்போதும். வெளியில் மழை கொட்டித் தீர்க்கிறது. வீட்டு வாசலில் இருந்த பள்ளம் கண்ணுக்குத் தெரியாமல் ஜலம்.

"பாட்டி... இவ்வளவு தண்ணியும் இத்தனை நாள் எங்கே இருந்தது"

"ம்ம்... பகவான்கிட்டே"

பூஜாவின் சிரிப்பு அழகு. எத்தனை சத்தமாகக் கேட்டாலும்.

"போ... பாட்டி... நீ பொய் சொல்றே... பகவான்தான் முடிவு பண்றார். எப்ப மழை கொட்டணும்னு" பூஜாவின் கவனம் இப்போது வெளியில் கொட்டும் மழை மீது திரும்பிவிட்டது.

"அப்பா... நான் நனைஞ்சுட்டேன்"

பூஜா எதிரில் வந்து நின்றாள். முன் முடியிலிருந்து நீர் சொட்டியது. கவுனிலும் ஈரம்.

"எட்டிப் பார்த்தேம்பா... வானத்தில் யார் நிக்கறான்னு. ஒண்ணுமே தெரியலே. ஒரே தண்ணி..."

# நெஞ்சாங்கூட்டில் நீயே நிற்கிறாய்...

அப்பா சொல்லியிருக்கார். கடல்லதான் இவ்வளவு ஜலமும் இருந்தது. அப்புறம் வெய்யில்ல ஆவியாகி வானத்துக்குப் போயி இப்ப மழையாக் கொட்டறது...."

அம்மா பேசாமலிருந்தது பூஜாவுக்கு உறுத்தியிருக்க வேண்டும்.

"பாட்டி... நான் சொன்னது சரியா"

"சரிதான்"

"இல்ல... நீங்க வேற ஏதோ சொல்ல நினைக்கிறீங்க"

பூஜா நிஜமாகவே சமர்த்து. புத்திசாலி. மனதைப் படிப்பவள். அப்படியே வசந்தியிடமிருந்து இந்தக் குணம் வந்திருக்க வேண்டும். அம்மாவின் முகத்தில் நிச்சயம் இந்த நிமிஷம் சிரிப்பு மலர்ந்திருக்க வேண்டும். அறைக்குள் இருந்தபடி அதை யூகிக்க முடிகிறது ராஜனால். அம்மாவின் குரல் கேட்டது.

"பூஜா... நம்ம ஊர்ல எப்பவும் வெய்யில்... கடலும் எப்பவும் இருக்கு. ஆனா ஏன் எப்பவும் மழை பெய்யறதில்லே... சொல்லு..."

பூஜாவின் சின்ன மூளைக்கு இது குழப்பம்தான்.

"தெரியலே பாட்டி"

அம்மா ஜெயித்துவிட்டாள்.

"அதனாலதான் சொன்னேன்.

ராஜன் எழுந்து டவலை எடுத்து வந்தான்.

"நானே துடைச்சுக்கிறேன்பா."

அம்மா எங்கே போனாள். இவன் மழையில் நனைந்தது அம்மாவுக்குத் தெரியாதா? ஹாலுக்குள் எட்டிப் பார்த்தான். அம்மா இல்லை. வீட்டின் பின்புறம் துளசி மாடத்தை வெறித்துக் கொண்டு அம்மா நின்றாள். அம்மாவும் நனைந்திருந்தாள்.

"அய்ய... பாட்டியும் நனைஞ்சிட்டாங்க."

பூஜா டவலை நீட்டியது.

"என்னம்மா"

"எப்படிடா. அவளுக்கு மனசு வந்தது..." விம்மினாள்.

பூஜா மறுபடி ஹாலுக்கு ஓடி



விட்டான்.

"அம்மா... ப்ளீஸ்மா... அந்தப் பேச்சு எதுக்கும்மா இப்ப"

"பார்க்கப் பார்க்க நெஞ்சு ஆத்துப் போறதுடா. என்ன பேச்சு. என்ன சூட்டிகை. குழந்தையை விட்டுட்டுப் போக எப்படிடா அவளுக்கு மனசு வந்தது. ஒரு ஜோசியன் சொல்லலியே. பொருத்தம் பார்த்தப்ப... இப்படி கை கழுவிட்டுப் போவான்னு... அட... பிரசவத்துல எத்தனையோ பேர் குழந்தையை விட்டுட்டுப் போறா... அல்பாயுசுன்னு அப்புறம் மனசைத் தேத்திக்கிறோம். இப்படி முழுசா ஒரு ரத்தினத்தைக் கண்ணு முன்னால பார்த்துட்டு கல் மனசாப் போவாளா ஒருத்தி.."

அம்மா புலம்பி ரொம்ப நாளாயிற்று. உள்ளே அடைபட்டுக் கிடந்தது இன்று பீறிட்டுக் கிளம்புகிறது. ராஜன் நகர்ந்து வந்துவிட்டான். புலம்பித் தீர்த்து விடட்டும். இன்னும் ஆறு மாதத்துக்குத் தாங்கும். உள்ளே பூட்டிப் பூட்டி வைத்தால் அதன் சுமையை அம்மாவால் தாங்க முடியாது. பூஜா தலையைத் துவட்டிக் கொண்டு அதே டவலை தலையைச் சுற்றி வைத்திருந்தாள். ராஜன் தன்னைக் கவனிக்கிறானா என்று ஓரக் கண்ணால் பார்த்தாள். அருகில் போய் அமர்ந்தாள். வேண்டுமென்றே சற்றுத் தள்ளி அமர்ந்தாள்.

■ ரிஷபன் ■



"பூஜாவைக் காணோமே" என்றான் வேறெங்கோ பார்த்தபடி விளையாட்டாக.

"பூஜா சாமிகிட்டே போயாச்சு."

ராஜன் திடுக்கிட்டுத் திரும்பினான்.

"என்ன சொல்றே"

அவன் பதற்றம் அவளுக்கு ஏதோ உணர்த்தியிருக்க வேண்டும்.

"இல்லப்பா. நீங்கதானே சொன்னீங்க. அம்மா சாமிகிட்டே போயிருக்காங்கன்னு. நானும் அங்கே போனா அம்மாவைப் பார்க்கலாம்னு."

வசந்தியைப் பற்றிய பேச்சு வந்தபோது சொன்ன பொய் இப்படித் திசை திரும்பும் என்று எதிர்பார்க்கவில்லை. ஒரு குழந்தையிடம் உன் அம்மா ஓடிப் போய் விட்டாள் என்றா சொல்ல முடியும்?

"அந்த மாதிரி இனிமேல் சொல்லாதே பூஜா"

அவன் குரல் நைந்திருந்தது. பூஜா அவனருகில் நெருங்கி வந்தாள். மடியில் படுத்துக் கொண்டாள். கால்களை சோபாவின் மேல் வைத்துக்கொண்டாள். அவன் கையைப் பற்றித் தன் கன்னத்தின் மீது வைத்துக்கொண்டாள். அடிப்பாவி... இவ்வளவும் வசந்தியின் மேனரிசம். எவளை மறக்க முடியாமல் மனசு தவிக்கிறதோ, அவளையே நினைவூட்டும் நிகழ்வுகள்.

அம்மா உள்ளே வந்தாள்.

"தூங்கிட்டாளா. அடடா..."

"பாட்டி... நான் முழிச்சுக்கிட்டுத்தான் இருக்கேன்" என்றாள் கண்ணைத் திறக்காமல்.

"அடி என் செல்லம்"

அம்மா அந்தப் பக்கம் அமர்ந்து பூஜாவின் கால்களைத் தன் மடிமீது வைத்துக் கொண்டாள். இரண்டு பேர் மனசிலும் அலையடித்துக் கொண்டிருந்தது. பெண்ணலை. வசந்தி...

ஊர் போகிற நாட்களில்தான் பூஜாவைச் சமாளிப்பது சிரமம். அதாவது முன்பெல்லாம்... அந்த அழுகையைப் பார்த்து ஒரு முறை ரயில் ஏறாமல் திரும்பி வந்துவிட்டான். பதினொரு மணிக்கு வீட்டுக் கதவைத் தட்டியதும் அம்மா பயத்துடன் எட்டிப் பார்த்து அதைவிட அதிகமாய்ப் பயந்தது இப்போதும் ஞாபகம் இருக்கிறது.

"ஏன் திரும்பி வந்துட்டே"

"பூஜா எங்கே"

"அவ அப்பவே தூங்கிட்டா"

படுக்கையில் பூஜாவின் தேம்பல் தூக்கத்திலும் புரிந்தது. முழுதாகச் சமாதானமாகவில்லை.

"முக்கியமான மீட்டிங்னியே"

ராஜன் பதில் சொல்லவில்லை. அந்த நிமிஷம் பூஜா மட்டுமே முக்கியமென்று தோன்றியது. பூஜா எழுந்திருக்க எட்டு மணி ஆகும் அப்போதெல்லாம். அவனும் அருகிலேயே படுத்திருந்தான். தூக்கம் முழுவதுமாகக் கலைந்துவிட்டது. பூஜா கண் விழிக்கும் போது முதலில் பார்வையில் பட வேண்டும். எட்டு அடித்து பத்து நிமிஷம்.

பூஜா கண் திறந்து பார்த்தாள்.

"ஹாய் செல்லம் குட்மார்னிங்"

"அதுக்குள்ளே போயிட்டு வந்துட்டீங்களா"

அம்மா ஏதோ சொல்ல வந்தாள். ராஜன் தடுத்து விட்டான். அப்புறம் அம்மா சொல்லியிருக்க வேண்டும். பூஜாவிடம் மெல்ல மெல்ல மாற்றம் வந்தது. டாட்டா காட்ட ஆரம்பித்தாள். ராஜனுக்குள் அழுகை பீறிடும். பூஜாவுக்கு இப்படி நேர்ந்திருக்கக் கூடாது. அப்பா இல்லாவிட்டால் அம்மா என்று சகஜமாக நிகழ வேண்டிய விஷயங்கள் இப்போது

"மருந்துக் கடைக்காரரிடம் சண்டை போட்டேன்."

"ஏன்?"

"டாக்டர் எழுதித்தந்த பிள்ளையார் சுழிக்கும் ஒரு மாத்திரை கொடுக்கிறாரு."

- ஆர்.தங்கராஜ்

வலுக்கட்டாயமாகத் திணிக்கப்படு கின்றன.

அலுவலக நிர்ப்பந்தங் களின் காரணமாக ராஜன் தாமதமாக வரும்போதெல் லாம் பூஜாவுக்காக ஒரு பரிசும் உடன் வரும்.

அம்மா கூட சொன்னாள்.

"வேண்டாம்பா... அவ இதை எதிர் பார்க்கலே"

ராஜன் பெருமூச்சுடன் சொன்னான்.

"தெரியும்மா..."

மனசாட்சியின் உறுத்தலுக்கு அவன் தரும் விலை.

"வேற யாருக்குச் செய்யப் போறேன்"

தனக்கான பணியை எந்தப் பிரச்னை யும் இல்லாமல் முடிக்க அவன் படும் சிரமத்துக்கு வேறு விதமான விமர்சனங் களும் இருந்தன.

இன்னொரு அலுவலரை அவருக் கான வேலை முடிவுறாமல் நின்றதை மேலாளர் சுட் டிக் காட்டி ராஜனோடு ஒப் பிட்டும் பேசினார்.

"ஸார்.. எனக்கு ஃபேமிலி இருக்கு. ஆபீஸ் மாதிரியே பர்சனல் லைஃப் முக்கியம்.."

அத்தோடு நில்லாமல் செக்ஷனில் சத்தமாய்ப் பேசினான்.

"பொண்டாட்டி இல்லேன்னா ஆபீஸ் லயே கிடக்கலாம். என்ன செய்யறது..."

ராஜன் அவனுக்குப் பதில் எதுவும் சொல்ல முற்படவில்லை. அவரவர் கஷ்டம் அவரவருக்கு. இன்றும் தாமதம். ஸ்டேட்மெண்ட் முடியவில்லை. கணினி அதற்கான நேரத்தை எடுத்துக்கொண்டு குடுவை சுழன்றபடி இருந்தது. ராஜன் கண்மூடிச் சில நிமிடங்கள் இருந்தான். கண் திறந்து பார்த்தபோது இன்னமும் கணினி தயார் நிலைக்கு வரவில்லை. கீழே அவனுக்காக ஒரு ஈ மெயில் காத்திருப் பதை சிவப்புக் கொடி அசைந்து உணர்த்தியது. தன்னிச்சையாய் மௌஸை அழுத்தினான். அனுப்புனர் பெயர் உஷா என்றிருந்தது.

'யாரது...'

கணினி கடிதத்தை கிளிக் செய்தான்.



'உங்களோடு பேச ஆசை. நீங்களும் விரும்பினால் பதில் போடுங்கள். கட்டாய மில்லை. போட்டால் ரொம்ப சந்தோஷம்.'

என்ன விளையாட்டு என்று தோன்றியது. மெயிலை அழித்துவிட லாமா... தவறுதலாய் மௌஸைக் கிளிக் செய்ய 'இந்த விலாசத்தைக் காப்பாற்றி வைக்கட்டுமா' என்றது 'வேண்டாம்' என்று ஒரு குரல் மனதுக்குள் சொல்ல. இன்னொரு மனது 'பதில் போடு' என்றது. அவனையும் அறியாமல் 'பதிலை' அழுத்தினான். என்னவென்று சொல்ல.

'நீங்கள் யாரென்று தெரியவில்லை. என்னைப் பற்றி உங்களுக்கு எந்த அளவு தெரியும் என்றும் புரியவில்லை. மன் னித்து விடுங்கள். நீங்கள் விரும்பும்படி என்னால் இந்தக் கடித விளையாட்டைத் தொடர முடியாது.'

அனுப்பிவிட்டான். இப்போது கணினி தனது வேலையை முடித்துக் கொண்டு ரிசல்ட்டைக் காட்டியது. சுத்த மாய் டாலி. ஹப்பாடா. இனி கிளம்பலாம். இன்று பூஜாவை சீக்கிரமாய்ப் பார்க் கலாம். பிரிண்ட் எடுத்து வைத்து விட்டுத் திரும்பியபோது மறுபடியும் கொடி ஆடியது. யார்... உஷாவா... மனதுக்குள் ஏதோ சிறகடிக்க கிளிக் செய்தான். உஷா!

"நன்றி... பதில் போட்டதுக்கு. அப்பா... ஏமாந்துட்டியா... என்னோட இன்னொரு பேர் உஷா.. ஞாபகம் இருக்கா. நீ கத்துக் கொடுத்த மாதிரி கரெக்டா மெயில் அனுப்பியிருக்கேன்தானே.. வித் லவ் பூஜா"

உடன் பூஜாவின் அழகான வண்ணப் படம். ●

# உ.மு.க. Vs உ.வா.மு.க.





நடிகர் செந்தில் அ.தி.மு.க.வில் சேர்ந்து கருணாநிதியை ஏக வசனத்தில் ஏசிக் கொண்டிருப்பதைக் கண்டு தி.மு.க.வினர் கவுண்டமணியை தங்கள் கட்சிக்கு இழுத்து விடுகிறார்கள். இதையறிந்த செந்தில், கவுண்டமணியைச் சந்திக்கிறார்.

**செந்தில் :** அண்ணே... வணக்கம்ணே!

**கவுண்டமணி :** வாடா, என்ன இந்தப் பக்கம்?

**செந்தில் :** உங்களை அந்தக் கட்சியில சேர்த்துக்கிட்டாங்களாமே?

**கவுண்டமணி :** அடிபட்டு உதைபட்டு முன்னுக்கு வந்த உன்னையே ஒரு கட்சி சேர்த்துக்கறப்ப, அடிகொடுத்து முன்னுக்கு வந்த என்னைச் சேர்த்துக்க மாட்டாங்களா?

**செந்தில் :** அதுக்கில்லண்ணே... இந்த மாதிரி சேரப்போறேன்னு ஒரு வார்த்தை முன்னாடியே சொல்லி இருந்தா நம்ம கட்சியிலயே சேர்த்துக்கறதுக்கு அம்மாகிட்டே நான் சிபாரிசு செஞ்சிருப்பேன்.

**கவுண்டமணி :** நீ எனக்கு சிபாரிசு லெட்டர் கொடுக்கறியா? எலி, யானையைப் பார்த்து கோவணம் வேணுமான்னு கேட்டுச்சாம். நான் நினைச்சா அமெரிக்காவுக்குப் போய் புஷ் கட்சியிலயே சிபாரிசு இல்லாம சேருவேண்டா...

**செந்தில் :** சரி சரி... நடந்தது நடந்து போச்சு... நமக்குள்ளே ஒரு ஒப்பந்தம் போட்டுக்கலாம்ணே...

**கவுண்டமணி :** ஒப்பந்தமா? என்னடா அது?

**செந்தில் :** சினிமாவுலதான் என்னை பேரிக்காய் தலையா, இஞ்சி தலையான்னு சொல்லி காலத்தை ஓட்டினீங்க. அதையே மேடையிலும் சொல்லக் கூடாது. நான் இப்ப அரசியல்வாதி. எனக்குன்னு ஒரு பிரஸ்டீஜ் இருக்கு.

**கவுண்டமணி :** உன்கிட்டே பிரஸ்டீஜ் மட்டும்தாண்டா இருக்கு. என் வீட்ல ப்ரீமியர், கேதான், வீடியோகான் எல்லாம் இருக்குடா... பிரஸ்டீஜை கழட்டி வெச்சாத்தான் அரசியல்வாதியாவே ஆக முடியும். இதை முதல்ல புரிஞ்சுக்கடா...

**செந்தில் :** அப்போ நான் அரசியல்வாதி இல்லைன்னு சொல்றீங்களா?

**கவுண்டமணி :** அப்படி இருந்தா இப்படி ஒரு மடத்தனமான ஒப்பந்தம் போடலாம்னு சொல்லுவியா?

**செந்தில் :** என்னதான் செய்யச் சொல்றீங்க?

**கவுண்டமணி :** அப்படி அகம்பாவம் இல்லாம கேளு. நான் சொல்ற மாதிரி செய். மேடையில இனிமே ஏ கருணாநிதியே, பி ஸ்டாலினே, சி தயாநிதியேன்னு இனிஷியல் போட்டுக் கூப்பிடறதை நிறுத்து. அவங்க யாரையும் திட்டாதே. அதுக்குப் பதிலா என்னைத் திட்டு. எவ்வளவு திட்ட முடியுமோ அவ்வளவு திட்டு.

**செந்தில் :** உங்களைப் போய் எப்படிண்ணே திட்டறது?

**கவுண்டமணி :** வாயாலதான். குறுக்கே பேசாம கேளுடா. பதிலுக்கு நான் உன்னை கன்னாபின்னான்னு திட்டறேன். எந்த மேடை கிடைச்சாலும் இப்படியே திட்டிப்போம். ஜனங்க இதைக் கேட்க கேட்க அவங்களுக்கு ஜெயலலிதா, கருணாநிதி, ஸ்டாலின் பேரெல்லாம் மறந்தே போய்டும். நம்மளைப் பத்தியே பேசுவாங்க. அந்தச் சமயத்துல நான் ஒரு கட்சி ஆரம்பிக்கறேன், நீ ஒரு கட்சி ஆரம்பி. அடுத்த எலக்ஷன்ல போட்டி போடலாம். அப்புறம் நீ அஞ்சு வருஷம், நான் அஞ்சு

வருஷம்னு மாறி மாறி முதல்வரா இருக்கலாம்.

**செந்தில் :** என்னண்ணே குழப்பறீங்க? இதெல்லாம் நடக்கற காரியமா?

**கவுண்டமணி :** அடேய்... உழைக்க உழைக்கத்தான் சக்ஸஸ் பிஸினஸ் மேனாக முடியும். படிக்க படிக்கத்தான் அறிவாளியாக முடியும். திட்டு வாங்க திட்டு வாங்கத்தான் சூப்பர் அரசியல்வாதியாக முடியும். ஜனங்க கவனத்துல

**கவுண்டமணி :** டேய், நாம ரெண்டு பேரும் எதிர் எதிரா இருந்தாத்தான் ஜனங்களுக்குப் பிடிக்கும். வருங்காலத்துல விவேக், வடிவேலு எல்லாம் கட்சி ஆரம்பிச்சாங்கன்னா அவங்களை வேணும்னா நான் ஒரு எலக்ஷன்ல, நீ ஒரு எலக்ஷன்ல மாத்தி மாத்தி கூட்டணி சேர்த்துக்கலாம்.

**செந்தில் :** சரிண்ணே... அப்ப நான்



இருக்க முடியும். புரியுதா? யாரையும் திட்டமாட்டேன்னு சொன்ன கேப்டனே இப்ப ஒருத்தரையும் விடறதில்லே.

**செந்தில் :** புரியுதுண்ணே. அப்போ நம்ம கட்சிக்கு என்ன பேர்னே வைக்கறது?

**கவுண்டமணி :** என்னோட கட்சிக்கு உ.மு.க.ன்னு வைக்கறேன். அதாவது உதைத்து முன்னேறுவோர் கழகம். எப்படி?

**செந்தில் :** பிரமாதம்ணே. அப்ப என்னோட கட்சிக்கு?

**கவுண்டமணி :** உ.வா.மு.க.ன்னு வெச்சுக்க. அதாவது உதை வாங்கி முன்னேறுவோர் கழகம்.

**செந்தில் :** அப்போ நாம ரெண்டு பேரும் கூட்டணி வெச்சுக்கலாமாண்ணே?

கிளம்பறேன்.

**கவுண்டமணி :** மறக்காதே. மேடை ஏறினதும் கண்டபடி திட்டு. காதால கேட்க முடியாதபடி திட்டு. முடிஞ்சா சைனீஸ், ஜப்பான் பாஷை எல்லாம் கத்துக்கிட்டு வந்து திட்டு. நானும் புதுசு புதுசா வார்த்தைகளைக் கண்டுபிடிச்சுட்டு வந்து திட்டறேன்.

**செந்தில் :** கலக்கிப்புடறேன் விடுங்க. எனக்கு அப்புறம் என் பையன், பேரன்னு வரிசையா இறக்கிடறேன்.

(செந்தில் உற்சாகத்துடன் கிளம்ப, 'அரசியல்ல இந்தக் கொடுமையெல்லாம் சகஜம்ப்பா' என்று முணுமுணுக்கிறார் கவுண்டமணி)

கற்பனை :
**குசும்புராஜ்**

# குப்பன் வந்தாலும் குவாலிஸில் வந்தாலும்...

சென்னை பாண்டி பஜாரிலுள்ள 'ரத்னா ஃபேன் ஹவுஸ்'க்குள் நுழைந்தால் சென்னை உஷ்ணத்தையும் தாண்டி சில்லென்ற காற்று முகத்தில் அடிக்கிறது. ரத்னா ஃபேன் ஹவுஸ்' நிர்வாக இயக்குநரான கே.எஸ். கிருஷ்ணமூர்த்தி, "ஹிடாச்சி கம்பெனி புதிதாக ஒரு மாடலை மக்களுக்கு அறிமுகப்படுத்த எண்ணினால் அவர்களுக்கு ஞாபகம் வருவது ரத்னா ஃபேன் ஹவுஸ்தான். ஜப்பானில் தயாராகும் பொருளின் முதல் பில் இங்குதான் போடப்படுகிறது" என்றார், நம்மிடம் உற்சாகமாக.

தொடர்ந்து, மின்விசிறி வாங்க வருபவர்கள் எவ்வாறு நாளடைவில் ரத்னா ஃபேன் ஹவுஸின் விசிறிகளாகின்றனர் என்று விவரித்தார்...

"வெறுமனே அட்டைப் பெட்டியைப் பார்த்தும், கேட்லாக்கைப் பார்த்தும் மட்டும் ஒரு பொருளை வாங்கிவிடக் கூடாது. எங்கள் கடையில் ஃபேன், ஏ.சி., வாட்டர் ஹீட்டர், சிம்னி அடுப்பு என அனைத்து மாடல்களையும் சுவரில் மாட்டிவைத்து மக்களின் பார்வைக்கு வைத்திருப்போம். அவற்றை இயக்கிக் காண்பித்து சாதக, பாதகங்களை விளக்குவோம். இந்தியாவில் எந்தக் கடையிலும் இல்லாத வசதி இது. எந்தப் பொருளையும் வாடிக்கையாளர்களிடம் திணிப்பது கிடையாது. மார்க்கெட்டில் இறக்கப்படும் புதிய கம்பெனிகளையும் அவசியமின்றி விற்க மாட்டோம். ப்ராண்டட் பொருட்களை வாங்கி, எங்கு கொண்டு சென்றாலும் சுலபமாக சர்வீஸ் செய்துகொள்ளலாம். அதேபோல் பேரம் பேசும் சமாசாரங்களும் கிடையாது. குப்பன் வந்தாலும் குவாலிஸில் வந்து இறங்கினாலும் ஒரே விலைதான். ஒரே உபசரிப்புதான்.

வந்தோமா பொருளை வாங்கிச் சென்றோமா என்று கஸ்டமர்கள் சுலபமாகச் சென்றுவிட முடியாது. ஃபேன் வாங்குகிறார்கள் என்றால், அறையின் அளவு முதற்கொண்டு பல தகவல்களை விசாரித்து அதற்கேற்ற மினிவிசிறியைப் பரிந்துரைப்போம். எண்பது சதுர அடி அறைக்கு 36 இன்ச் அளவுள்ள ஃபேன் மாட்டினால் போதுமானது. அதேபோல் நூறு சதுர அடி அறைக்கு 42 இன்ச், நூற்றி இருபது அடி அறைக்கு 48 இன்ச் என்றெல்லாம் அறிவுறுத்துவோம். மின்விசிறி தரையிலிருந்து எட்டரை அடியும் மேற்கூரையிலிருந்து ஒன்றரை அடியும் இடைவெளி இருந்தால் மட்டுமே காற்று தாராளமாகக் கிடைக்கும். மக்களுக்கு மட்டுமின்றி மின் விசிறிகள் மற்றும் ஏ.சிகள் தயாராகும் ஃபேக்டரிகளுக்கும் சென்று எங்களுடைய கருத்துகளைக் கூறி அதற்கேற்றாற்போல் வடிவமைக்கச் செய்வோம். இதனால் எந்தப் புது மாடலாக இருந்தாலும் அவை எந்த நாட்டில் உற்பத்தி செய்யப்பட்டாலும், முதலில் ரத்னா ஃபேன் ஹவுஸில்தான் அறிமுகம் செய்து வைக்கப்படும்.

ஐம்பது வருட பாரம்பரியத்துக்குச் சொந்தக்காரர்கள் நாங்கள். 1957-ல் தி.நகரில் 'ரத்னா எல்க்ட்ரிகல்ஸ்' என்று சிறிய அளவில் ஆரம்பித்தோம். நான்

எலக்ட்ரிகல் இன்ஜினீயரிங் படித்து அப்பாவின் வியாபாரத்தில் இணைந்து கொண்டேன். 1970-ல் தொடங்கியது ரத்னா ஃபேன் ஹவுஸ். எங்கள் கடைமீது நம்பிக்கை வைத்து வெளியூரிலிருந்தெல்லாம் வந்து வாங்குவார்கள். 1983-ல்தான் மின்விசிறிகளின் வியாபாரத்தில் புரட்சி ஏற்பட்டது. வியாபாரமும் சூடுபிடித்தது. அதற்கு முன்பு வெள்ளை, ப்ரவுன் வண்ணங்களில் மட்டுமே மின்விசிறிகள் வந்து கொண்டு இருந்தன. ஆனால் அப்போது புதிதாக மார்க்கெட்டுக்குள் நுழைந்த கேதான், போலார் நிறுவனங்கள் பல்வேறு வண்ணங்களில் மாடல்களைக் குவித்தார்கள். சுவர், மேற்கூரை வண்ணங்களுக்கேற்ப மக்களும் விதவிதமாக மின்விசிறிகளை வாங்கினார்கள். இந்தியாவிலேயே முதன்முறையாக கடையில் வாங்கும் பொருட்களை ஃப்ரீ டோர் டெலிவரி செய்தோம்.

1993லிருந்து ஏ.சி விற்க ஆரம்பித்தோம். அப்பொழுதெல்லாம் வோல்டாஸ், கேரியர் என இரண்டு கம்பெனிகள்தான் இருந்தன. புக் பண்ணி ஒரு மாதம் கழித்தே ஏ.சி. கிடைக்கும். எங்களுடைய முயற்சியால் ஏ.சி நிறுவனங்களை சென்னையிலேயே அதன் உற்பத்தியைத் தொடங்கச் செய்தோம். இதனால் புக் செய்த நான்கு



• கிருஷ்ணமூர்த்தி

மணி நேரத்தில் ஏ.சி காற்றை அனுபவிக்கத் தொடங்கினர் வாடிக்கையாளர்கள். 2001லிருந்து ஏ.சி.யின் விலையும் வெகுவாகக் குறைந்துவிட்டது.

புதிதாக வீடு கட்டுபவர்கள் நேராக ரத்னாவுக்கு வந்து விடுகிறார்கள். ஐம்பது ஆண்டு உழைப்பில் இந்தியாவின் நெ.1 டீலராக உயர்ந்துள்ளோம். பல விதமான பரிசோதனை முயற்சிகளும் கஸ்டமர்கள் மீதான அக்கறையுமே காற்றுபோல் என்றைக்கும் அழியாப் புகழைக் கொடுத்துள்ளது."

**- ச.ந. கண்ணன்**

ஆச்சரியம் ஆனா உண்மை... படத்துல ஒரு பிரேம்லகூட இம்போர்டட் தீவிரவாதிங்க வரமாட்டாங்க. முழுக்க முழுக்க சுதேசியும் உள்ளூர் அரசியல்வாதிகளும் தாதாக்களும் தான் நிரம்பியிருக்காங்க. விஜயகாந்தை தராசில் நிக்க வைச்சு எடைக்கு எடை வசனம் எழுதியிருக்காங்க. அவ்வளவு 'கனம்'. படத்துல ஒரே ஆறுதலான விஷயம் இதுதான்.

விஜயகாந்த் (சுதேசி) நிரம்பப் படித்த வேலையில்லாப் பட்டதாரி. டைட்டில்லேர்ந்து வணக்கம் வரை இவருக்கு வேலையே கிடைக்கல. ஏன்னு தெரியல. அப்படி என்னதான் படிச்சிருக்கார்னு பார்த்தா கடைசி வரை சொல்லாமல் அடம் பிடிக்கிறாங்க. அடிக்கடி கம்ப்யூட்டரைத் திறந்து விண்டோஸ் ஆபரேடிங் சிஸ்டத்தை ஏதோ செய்றார். கீபோர்ட் மேல் வரிசையில் ஒரு கீ... இரண்டாவது வரிசையில் ஒரு கீ... இரண்டு காட்சிகளுக்கு அடுத்து மூன்றாவது வரிசையில் ஒரு கீன்னு விரல்களை ஒத்தி ஒத்தி எடுக்கிறார், அவ்வளவு தான். கம்ப்யூட்டரை அணைச்சுட்டு போயே போயிடுறார்.

படம் ஒரு கோர்வையாவே இல்லை. பிட் பிட்டா நிறைய ஷூட் செஞ்சு கடைசியில் சாவகாசமா ஒட்டியிருக்காங்க. அதனால் படத்தோட கதையை எந்த இடத்துல ஒட்டியிருக்காங்கன்னு அவ்வளவு சுலபத்துல கண்டுபிடிக்க முடியல. (அதைத்தான் விஜயகாந்த் கூகுளில் தேடுறாரோ என்னமோ).

சி.எம். தொடர்புடைய கொலை வழக்கு சி.டி. ஒண்ணு சுதேசியிடம் கிடைக்குது. அதைத் துருப்புச் சீட்டா வைச்சுக்கிட்டு சி.எம்.மை விரட்டி மிரட்டிப் பல காரியங்களைச் சாதிக்க முயல்றார். அரசாங்க வேலை செய்றவங்க தங்களோட குழந்தைகளை அரசாங்கப் பள்ளியிலதான் சேர்க்கணும்ங்கறதுல தொடங்கி, பல நலத் திட்டங்களை அறிமுகப்படுத்துறார் (கேப்டன் போட்டு வச்சிருக்குற தேர்தல் அறிக்கையிலிருந்து நகல் எடுத்திருப்பாங்களோ?). கிட்டத் தட்ட காணாமல் போயிருந்த சாமியார் வில்லன் ஃபார்முலாவைத் தேடிப் பிடிச்சு புகுத்தியிருக்காங்க.

இசை ஸ்ரீகாந்த்தேவாவாம். ஹீரோயின் ஆஷிமா வந்து வந்து போறார், ஸ்க்ரீன்சேவர் மாதிரி. வடிவேலு வர்றார். சிரிப்புதான் வரமாட்டேங்கிறது. சண்டைக் காட்சிகள்ல சுதேசி சுழன்று சுழன்று இயங்குறார். தரையை விட்டுத் தாராளமா உயரே உயரே பறக்குறப்போ காலருக்கு பக்கத்துல கயிறு தெரியுது. இத்தனை வெளிப்படையா ஒரு படத்தை எடுத்ததுக்கு கட்டாயம் பாராட்டலாம்.

- லஜ்ஜாவதி

# சுதேசி

# நடக்குமென்பார்; நடக்கும்!



* படம்: ஸ்ரீஹரி




தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்:** மனத்தில் இருந்த குழப்பம் போய், துணிவும் தைரியமும் ஏற்படும். திருமணக் காரியம் கைகூடும். வெளியூர்ப் பிரயாணம் ரெடி. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். வாகனம், வீடு வாங்க ஏற்ற தருணம். கணவன்- மனைவி உறவு அனுகூலமாக இருக்கும். குழந்தைப்பேறு ஏற்படும். உத்தியோகத்தில் பணி உயர்வு, பணி மாற்றம் ரெடி. ஆடை, ஆபரண வஸ்துகள் சேரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். பொருளாதாரக் கஷ்டம் விலகும். சனிக்கிழமைதோறும் ஆஞ்சநேயர் கோயில் சென்று வழிபட்டு வரவும்.

**ரிஷபம்:** வழக்கு, வியாபாரம் வெற்றி பெறும். நீண்டகால எண்ணங்கள் கைகூடும். குழந்தைகள் வழியில் நல்லது நடக்கும். நெருங்கிய நண்பர்/உறவினர் இடம்மாறிப் போவார்கள். பூர்வீகச் சொத்து பாகப் பிரிவினை ஏற்படும். தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். கணவன்- மனைவிக்குள் அனுசரணை தேவை. கொடுக்கல் வாங்கலில் கவனம் தேவை. உடல் ஆரோக்கியம் மேன்மை பெறும். புதிய முயற்சி கைகூடும். திடீர் தனவரவு ஏற்படும். சுபநிகழ்ச்சி நடக்கும். ராகு/கேது/குருவை வழிபாடு செய்து வரவும்.

**மிதுனம்:** உத்தியோகத்தில் நெருக்கடிகள் நிறைந்த வாரம். ஒரு சிலருக்கு வேலை மாற்றம் ரெடி. வேலைப்பளு அதிகரிக்கும். பொருளாதாரச் சிரமம் இருக்காது. குடும்பத்தில் சுபகாரியம் கைகூடும். தாயாரின் உடல்நிலையில் கவனம் தேவை. குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். வாக்குவன்மை மேலோங்கும். பணப் பற்றாக்குறை வராது. வியாபாரத்தில் நல்ல லாபம் கிடைக்கும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். வெளிநாட்டு அழைப்பு கிட்டும். குழந்தைப் பேறு உண்டாகும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். ராகு/கேதுவை வழிபட்டால் நற்பலன் கிடைக்கும்.

**கடகம்:** சிலருக்கு வீடு மாற்றம் செய்ய வேண்டிய சூழ்நிலை வரும்.

# பரத்வாஜ்...

**எனது மகளுக்கு குழந்தைப்பேறு எப்பொழுது அமையும்? வேலைவாய்ப்பு, வெளிநாடு செல்லும் வாய்ப்பு உண்டா?**

**- அலமேலு, சென்னை - 34**

உங்களுடைய மகளுக்கு 2006-ல் குழந்தைப்பேறு அமையும். ராகுதசை நடப்பதால் வெளிநாடு செல்லக்கூடிய வாய்ப்பு இருக்கிறது. மூன்றாவது வேலை நிரந்தரமாக அமையும்.

**என் பையனுக்கு நிரந்தரமான வேலை எப்பொழுது கிடைக்கும்? திருமணம் எப்போது?**

**- ராதா, சென்னை - 83**

உங்கள் பையனுக்கு சனி தசை நடைபெற்று வருகிறது. வெளிநாட்டில் நிரந்தரப் பணி அமையும். 2007-ல் திருமணம் அமையும். எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**எனது பேத்தியின் மேற்படிப்பு,**

குடும்பத்தில் சுபகாரிய நிகழ்ச்சிகள் நடக்கும். உடல்நிலை பாதிப்பு இருக்காது. வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். தூர தேசப் பிரயாணம் செல்ல நேரிடும். புதிய வேலை கிடைக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். வீடு வாங்க நல்ல தருணம். பணக் கஷ்டம் இருக்காது. நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். தந்தையின் உடல்நிலை சற்று பாதிப்புக்கு உள்ளாகும். சனி/குரு வழிபாடு செய்து வரவும்.

**சிம்மம்:** எதிலும் கவனமுடன் செயல்படுங்கள். கூட்டாளிகளால் தொல்லை வரலாம். வண்டி வாகனங்களில் செல்லும்போது கவனம் தேவை. யாருக்கும் ஜாமீன் போட வேண்டாம். கணவன் - மனைவி அனுசரித்துப் போகவும். யாரிடமும் வாக்குவாதம் வேண்டாம். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவை. மறைமுக எதிர்ப்புகள் இருக்கும். உடல் ஆரோக்கியத்தில் கவனம் தேவை. உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். ராகு/கேது/குரு/சனி வழிபட்டு வருதல் நலம் தரும்.

**கன்னி:** கணவன்- மனைவிக்குள் அனுசரணை தேவை. வாக்குவன்மை மேலோங்கும். திருமணக் காரியம் கைகூடும். வீடு/வாகனம் வாங்க ஏற்ற காலம். பணக்கஷ்டம் வராது. குழந்தைகள் வழியில் சந்தோஷமான காரியம் கைகூடும். உற்றார் உறவினர்களுக்கும் நல்ல செய்தி தேடி வரும். உத்தியோகத்தில் வேலைப்பளு அதிகரிக்கும். மனைவிக்கு சற்று உடல்நலிவு ஏற்பட்டு விலகும். வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். செலவுகள் சுபமானதாக இருக்கும். மாணவ- மாணவிகள் படிப்பில் மேலோங்குவார்கள். ராகு/கேது வழிபாடு நற்பலனைத் தரும்.

**துலாம்:** போட்டி, வழக்கு, வியாபாரத்தில் வெற்றி தரும் வாரம். நீண்டநாள் முடிவுபெறாத காரியம் உடன் பலிதமாகும். குடும்பத்தில் நல்ல காரியம் நடக்கும். உத்தியோகத்தில் முன்னேற்றம் கிட்டும். பணக் கஷ்டம் வராது. கொடுக்கல், வாங்கல் பிரச்னை முடிவுக்கு வரும். வரவேண்டிய பழைய பாக்கிகள் வசூலாகும். சத்ரு தொல்லை நீங்கும். எதிரிகள் விலகிப் போவார்கள். உடல் ஆரோக்கியம் பாதிப்பு ஏற்படாது. வியாபாரத்தில் நல்ல லாபம் ஏற்படும். நண்பர், உறவினர்களால் அனுகூலம் ஏற்படும். குரு/சனி வழிபாடு செய்து வரவும்.

**விருச்சிகம்:** மனக் குழப்பமும் டென்ஷனும் நிறைந்த வாரம். உடல் நிலையில் கவனம் தேவை. வீட்டைப் பற்றியோ/ குழந்தைகள் பற்றியோ கவலை தரும் வாரம். பூர்வீகச் சொத்து பாகப்பிரிவினை ஏற்படும். நண்பர்,

உறவினர் மூலம் அனுகூலம் ஏற்படும். சிலருக்கு வீடு/வாகனம் வாங்க ஏற்ற தருணம். உத்தியோகத்தில் நல்ல முன் னேற்றம் ஏற்படும். விரும்பிய இடத்துக்கு மாறுதல் கிடைக்கும். வியாபாரத்தில் சற்று தேக்கநிலை ஏற்பட்டு சிரமத்துக்கு உள்ளாகும். பத்திரிகையில் பெயர் வரும். கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. ராகு/கேது/குரு வழிபாடு சிறந்தது.

**தனுசு:** உத்தியோகத்தில் இடமாற்றம் ஏற்படும். புதிய வேலை கிடைக்கும். வேலைப்பளு அதிகரிக்கும். பண விருத்தி ஏற்படும். உடல்நிலை பாதிக் காது. மனநிறைவு ஏற்படும். சுபகாரியம் கைகூடும். குழந்தையால் சந்தோஷம் கிட்டும். நீண்டகால ஆசைகள் நிறை வேறும். தொழில்துறையில் அபிவிருத்தி ஏற்படும். புதிய தொழில் துவங்க நல்ல காலம். கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். நண்பர், உறவினர்களால் ஆதாயம் ஏற்படும். மாணவ /மாண விகள் படிப்பில் மேலோங்குவார்கள். வீடு வாகனம் வாங்க நல்ல நேரம். மன சஞ்சலம் தீரும். மனத்தில் புத்துணர்ச்சி ஏற்படும். ராகு/கேது/சனி வழிபாடு நற்பலனைத் தரும்.

**மகரம்:** வழக்கு வெற்றி அளிக்கும். பணவரவு ரெடி. கணவன்-மனைவி உறவு நன்றாக இருக்கும். உற்றார், உற வினர்களால் ஆதாயம் கிட்டும். மனத் தில் தன்னம்பிக்கை மிகுந்து காணும். சிலருக்கு வீடு மாற்றம் செய்ய நேரிடும். உத்தியோகத்தில் நற்பெயர் ஏற்படும். தாயின் உடல்நிலையில் சற்று நலிவு ஏற்படும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். வீடு வாங்க நல்ல காலம். திரு மணக் காரியம் கைகூடும். உடல் ஆரோக் கியம் பாதிக்காது. சனி/குரு வழிபாடு செய்து வரவும்.

**கும்பம்:** எதிர்ப்புகள் விலகும். வேலையில் முன்னேற்றம் ஏற்படும். உல் லாசப் பிரயாணம் செல்ல நேரிடும். பணக்கஷ்டம் விலகும். வீடு/வாகனம் வாங்க ஏற்ற காலம். குழந்தைகள் வழி யில் சுபகாரியம் கைகூடும். நெருங்கிய கூட்டாளிகள் இடம்மாறிச் செல்வார் கள். யாருக்கும் ஜாமீன் போட வேண் டாம். வண்டி, வாகனத்தில் செல்லும் போது கவனம் தேவை. உணவுக் கட்டுப்பாடு அவசியம். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். மனச் சலனம் தீரும். கணவன்- மனைவி விட்டுக் கொடுத்துப்போவது நற்பல னைத் தரும். ராகு/கேதுவை வழிபட்டு வந்தால் நற்பலன் கிட்டும்.

**மீனம்:** பொருளாதாரக் கஷ்டம் விலகும். வேலையில் உயர்வு ரெடி. கணவன் - மனைவிக்குள் அனுசரணை தேவை. வேலைப்பளு அதிகரிக்கும். குடும்பத்தில் நல்ல காரியம் நடக்கும். நீண்டகால ஆசைகள் நிறைவேறும். சிலருக்கு வீடு வாங்க யோகம் வந்து சேரும். வியாபாரத்தில் நல்ல செல்வாக்கு ஏற்படும். குழந்தைகள் வழியில் சுப நிகழ்ச்சி நடக்கும். மாணவ-மாணவியர் கல்வியில் முன்னேற்றம் அடைவார்கள். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் கிட்டும். வீடு மாற்றம் ரெடி. பத்திரிகைகளில் பெயர் வரும். உடல்நிலை பாதிக்காது. ராகு/கேது/குரு வழிபாடு செய்து வரவும். ○

## ...பதில்கள்

**திருமணம், சந்தான பாக்கியம் பற்றிக் கூறவும்...**

**- மங்களசுந்தரி, சிதம்பரம்**

உங்கள் பேத்திக்கு வெளிநாடு சென்று படிக்கும் வாய்ப்பு உள்ளது. 23 வயதில் திருமணம் அமையும். நாகதோஷம் உள்ள வரனைச் சேர்க்கவும். நல்ல குழந்தை பாக்கியம் உண்டு.

**எனது மகளின் திருமணம், வேலைவாய்ப்பு பற்றிக் கூறவும்....**

**- கிருஷ்ணன், நங்கநல்லூர்**

உங்கள் பெண்ணுக்கு 2006 இறுதியில் திருமணம் கைகூடும். நாகதோஷம் உள்ள ஜாதகரைச் சேர்க்கவும். மணவாழ்வு நன்றாக இருக்கும். நல்ல வேலை வாய்ப்பு கிடைக்கும்.

"என்னங்க நான் கேட்டதுக்கு பதிலே சொல்லலையே" என்றாள் இந்திரா, ராஜேந்திரனை நோக்கி,

"என்ன கேட்டே?"

"பாட்டிக்கு ரொம்ப சீரியஸா இருக்காம். என்னைப் பார்க்கணும்னு சொல்றாங்களாம். அப்பா போன் பண்ணினார். போய்ப் பார்த்துட்டு வரட்டுமான்னு கேட்டேன்."

"பேச்சு மூச்சே இல்லாம கிடக்கறதா சொன்னே இல்லே?"

"ஆமா"

"அவங்களுக்கு என்ன வயசாகுது?"

"தொண்ணூறு"

"ஐஸீ" என்றவன் நிதானமாக 'டை'யைக் கட்டிக் கொண்டான். பிறகு அவள் பக்கம் திரும்பி "இந்திரா! ஒண்ணு சொன்னா கோவிச்சுக்க மாட்டியே?" என்று கேட்டான்.

"என்னங்க?"

"பேச்சு மூச்சே இல்லாம கிடக்கறவங்களைப் போய்ப் பார்த்து மட்டும் என்ன பிரயோஜனம்? இங்கே இருந்து செலவு பண்ணிக்கிட்டுப் போய் பார்த்துட்டு திரும்பி வருவே. நீ இங்கே வந்து இறங்கறதுக்கு முன்னாடி போன் வரும். பாட்டி போய்ட்டான்னு... மறுபடியும் ஓடணும். டபுள் செலவுதானே? அதுக்கு ஒரே முறையாப் போகலாமே" என்றான்.

இந்திரா திடுக்கிட்டாள். "எ... என்னங்க பேசறீங்க?" என்றவளின் கண்கள் கலங்கிவிட்டன.

"ஏய்... ஏய்... எதுக்கு மெகா சீரியல் நாயகி மாதிரி உடனே கண் கலங்கறே? அப்படி என்ன தப்பா பேசிட்டேன்? நீயே கொஞ்சம் பிராக்டிகலா யோசி. மூச்சு பேச்சு இல்லாம இருக்கறவங்ககிட்டே போய் நீ எதுவும் பேசப் போறதில்லே. சும்மா முகத்தைத்தான் பார்க்கணும். தொண்ணூறு வயசுன்னு சொல்றே. இதுக்கு மேல பிழைச்சு எழுந்து நடமாடப் போறதில்லே. பிறந்தவங்க எல்லாம் இறந்துதான் ஆகணும். அந்த விதிமுறைப்படி இறக்கப் போறாங்க."

"அ... அதுக்காக உ... உயிரோடு இருக்கறப்பவே போ.. போய்டுவாங்கன்னு சொல்றதா?"

"அதனால என்ன? நெருப்புன்னு சொன்னா வாய் வெந்துடாது. நாம ஒண்ணும் முனிவரும் கிடையாது சொன்னதும் பலிக்கறதுக்கு. இப்போ இருக்கிற விலைவாசியை நினைச்சுப்பாரு. எவ்வளவு வந்தாலும் பத்தறதில்லை. இந்த நிலையில டபுள் செலவு செய்யறது மடத்தனம்தானே?"

"எல்லாத்தையும் மூளைய வெச்சு கணக்குப் போடக்கூடாதுங்க. சில விஷயங்கள்ல மனசை வெச்சு கணக்குப் போடணும்."

"மனசுங்கறதே மூளையோட உருவகம் தான் இந்திரா" என்றான் ராஜேந்திரன்.

"இப்ப என்னதான் சொல்றீங்க?"

"இப்ப போறது அனாவசியம்னு சொல்றேன். அதுக்காக உன்னைக் கட்டாயப் படுத்தலை. கட்டியும் வைக்கலை. போய்த் தான் ஆகணும்னா தாராளமா போ. எனக்கு நேரமாச்சு. கிளம்பறேன். அப்படி நீ போறதா இருந்தா சாவியை பக்கத்து வீட்டுல கொடுத்துட்டுப் போ. இந்தா பஸ் சார்ஜ்" என்றவன் பர்ஸை எடுத்து பணத்தை நீட்டினான்.

இந்திரா அமைதியாக இருந்தாள்.

"என்ன பார்க்கறே? சீக்கிரம் பிடி"

"வேண்டாம்" என்றாள்.

"குட்! யோசிக்க ஆரம்பிச்சுட்டே. அப்ப நான் கிளம்பறேன்" என்றவன் கிளம்பிவிட்டான்.

இந்திரா சோர்வுடன் அமர்ந்துவிட்டாள். திருமணமான ஒரு வருடத்தில் ராஜேந்திரனின் குணங்களும், நடவடிக்கைகளும் பழகிப் போய்விட்டன. எத்தனையோ விஷயங்களில் தன்னை

மாற்றிக்கொண்டு விட்டாள். ஆனாலும் சில சமயங்களில் இதுபோன்ற பேச்சுக்கள் அதிர்ச்சியை ஏற்படுத்துகின்றன.

தொலைபேசி ஒலித்தது. எடுத்தாள். அவள் அம்மாதான் பேசினாள்.

"என்ன இந்திரா எப்போ வர்றே?" என்று கேட்டாள்.

'என்ன பதில் சொல்வது?' என்று புரியாமல் யோசித்தாள்.

"அ... அவர்கிட்டே இன்னும் சொல்லவே இல்லைம்மா."

"ஏன்டி?"

"ஏதோ ஆபீஸ் டென்ஷன்ல இருக்காரும்மா."

"அதுக்கும் இதுக்கும் என்னடி சம்பந்தம்? பாவம்டி பாட்டி... தலையைத் திருப்பி கண்ணை உருட்டி உருட்டித் தேடுறா. 'யாரைத் தேடறே இந்திராவையா'ன்னு கேட்டா தலையை ஆட்டுறா. நான் வேணும்னா மாப்பிள்ளை செல்லுக்கு போன் பண்ணி கேட்கட்டுமா?"

"வே... வேணாம்மா நானே பேசிட்டு வரேன்."

"சீக்கிரம் வா இந்திரா. வெச்சுடறேன்" என்று கூறி தொடர்பைத் துண்டித்தாள்.

இந்திராவுக்கு முன்பு பிறந்தவர்கள் இருவரும் ஆண் குழந்தைகள். ஆகவே அவர்களிடம் அவ்வளவாக ஒட்டுதல் இல்லை. இவளைத்தான் எப்போதும் தூக்கி வைத்துக் கொள்வாள் பாட்டி. தினமும் திருவிழாவுக்கு போவதைப் போன்ற அலங்காரத்துடன்தான் பேத்தியை பள்ளிக்கு அனுப்பி வைப்பாள்.

'இந்த நுணுக்கமான பாசப் பிணைப்பு கணவனுக்குப் புரிய நியாயமில்லை. எதையும் பணத்தை முன்னிலைப்படுத்தி கணக்கிடும் மூளைக்கு இதெல்லாம் அனாவசியமாகத்தான் தெரியும். புரிய வைக்கவும் இப்போது நேரமில்லை' என நினைத்தவள் ஒரு முடிவுக்கு வந்தாள்.

ராஜேந்திரனின் செல்போனுக்குத் தொடர்பு கொண்டாள்.

"நான்தாங்க. சாவியைப் பக்கத்து வீட்டுல கொடுத்துட்டுப் போறேன்" என்றாள்.

"என்ன திடீர்னு?" என்றவன் குரலில் ஆச்சர்யம்.

"திடீர்னு இல்லை.



ஆரணி யுவராஜ்



''எதிரி நாட்டு மன்னரிடமிருந்து 'புறா விடு தூது' வந்துள்ளது மன்னா?''

''பறவைக் காய்ச்சலை அனுப்பி யிருப்பான். விரட்டிவிடுங்கள் மந்திரி யாரே!''

- வெங்கு

இப்பத்தான் தெளிவா முடிவெடுத்தேன். நாளைக்கு வந்துடறேன்.''

"ஒரு நாள்ல திரும்பறதுக்கு அவ்வளவு தூரம் போகணுமா? சொன்னாலும் புரியலை. எப்படியோ போ" என்றான்.

இந்திரா எதுவும் பேசாமல் வைத்து விட்டாள். பின்னர் வேகவேகமாகத் தயாராகிக் கிளம்பினாள். ஊரை அடைய மாலை நான்கு மணியானது.

கட்டிலில் துரும்பாகப் படுத்திருந் தாள் பாட்டி. இந்திரா கட்டில் முனையில் அமர்ந்து பாட்டியின் கரங்களை எடுத்துத் தனது உள்ளங்கைகளில் பொத்திக் கொண்டு ''பாட்டி! பாட்டி!'' என்று அழைத்தாள்.

அவள் கண்கள் திறந்தன.

"எப்படி பாட்டி இருக்கே?" என்று கேட்டாள். அப்படிக் கேட்டது அவ ளுக்கே அபத்தமாகத் தோன்றியது. ஆனா லும் வேறு வார்த்தைகள் தெரியவில்லை. பாட்டி தலையசைத்தாள். அதற்கான பொருளை நம்மையே யூகித்துக் கொள்ளச் சொல்வது போலிருந்தது.

"நேத்தெல்லாம் பேத்தியை அப்படித் தேடினியே, இதோ வந்திருக்கா. என்ன கொடுக்கப் போறே? தலையணைக்குக் கீழே ஒளிச்சு வெச்சுட்டு இருக் கியா? வேணும்னா நாங்க வெளியில போய்டட்டுமா?'' என்று கிண்டலடித்தான் சின்ன அண்ணன்.

"டேய் போடா அப் படி. எப்பப் பாரு கிண் டல்தான்'' என்று விரட்டினாள் அம்மா.

இரவு நன்றாகக் கரைத்த பால் உணவை ஸ்பூனால் இந்திராவே பாட்டிக்கு ஊட்டிவிட் டாள். பக்கத்திலேயே தரை யில் படுத்துக் கொண்டாள். பாட்டியுடனான பழைய நினைவுகளில் மூழ்கியவளுக்கு நீண்ட நேரம் கழித்துத்தான் உறக்கம் வந்தது.

அடுத்த நாள் பாட்டியிடம் ஊருக்குப் போய் வருவதாகச் சொன்னதும் தலையாட்டினாள். அவள் கண்களில் தேடல் போய் திருப்தி வந்திருந்தது.

பெரிய அண்ணன் பஸ் ஏற்றி விட் டான். ஊருக்கு வந்து வீட்டை அடைய, உள்ளே ராஜேந்திரன் இருப்பதைக் கண்டு ஆச்சர்யமானாள்.

"என்னங்க இவ்வளவு சீக்கிரம் வந் துட்டீங்க?" என்று கேட்டாள்.

"கிளம்பு" என்றான்.

"எங்கே?"

"போன் வந்தது. உன் பெரிய அண் ணன் பேசினான். உன்னை பஸ் ஏத்திட்டு வீட்டுக்குப் போய்ப் பார்த்தா...''

"பா... பாட்டி?"

''ஆமா. நான் சொன்னேனில்லே? இதுக்கெல்லாம் பெருசா ஞானம் வேண் டியதில்லை. கொஞ்சம் யோசனை இருந்தா போதும். சொன்னா கேட்கலே. விட்டுட்டேன். மீறி தடுத்தா ஆணாதிக்கம், பெண்ணுரிமைன்னு புலம்புவீங்க. இப்ப பாரு பணத்துக்குப் பணம் செலவு. உடம்பு அலைச்சல் வேற. கிளம்பு'' என்றான்.

இந்திரா எதுவும் பேசாமல் கிளம் பினாள். சில விஷயங்களில் விவாதித்து ஜெயிப்பதை விட சும்மா இருந்து விடுவது திருப்தியாக இருக்கிறது. ●

# கோடை வெயிலுக்கு இதமான குளுகுளு சுற்றுலாக்கள்!!!

**அந்தமான் சுற்றுலா**
**4,500/- + Tickets**
**4 Nights / 5 days**

டில்லி - அமிர்தசரஸ் - மணிக்காரன் - மணாலி - ஐஸ் பாயின்ட் - சிம்லா

டீலக்ஸ் சுற்றுலா : 7,200/-
(டூர் முழுவதும் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்)

மத்திய அரசு ஊழியர்களுக்கான LTC சுற்றுலா : 6,900/-
(டில்லியில் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்)

டில்லி - ஹரித்துவார் - மணிக்காரன் - மணாலி - ஐஸ் பாயிண்ட் - அமிர்தசரஸ் - ஜெய்ப்பூர் - ஆக்ரா ரூ.7,200/- (டில்லியில் ஏ.சி பஸ் மற்றும் டூர் முழுவதும் ஏசி ரூம் வசதியுடன்)

11 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு 50% மட்டுமே

சைவ உணவுடன்

**பத்ரிநாத் - கேதார்நாத்**
**கங்கோத்ரி - யமுனோத்ரி**
**கோமுகி - வைஷ்ணவி**
**தேதி:9.6.06 ரூ.8900/-**

காஷ்மீர் - டில்லி - அமிர்தசரஸ் - வைஷ்ணவி 7,900/- (டில்லியில் ஏசி அறைகள் மற்றும் ஏசி பஸ் வசதியுடன்)

கல்கத்தா - டார்ஜிலிங் - கேங்க்டாக் 6,500 /- (கல்கத்தாவில் ஏசி பஸ் வசதியுடன்)

**திருக்கயிலாய யாத்திரை**
ரூ. 57,000/- மட்டுமே
விமான டிக்கட் உட்பட
(17 யாத்திரைகளை வெற்றிகரமாக நடத்தியுள்ளோம்)

கேரள சுற்றுலா : 3,500/-

**ஸ்ரீ டிராவல்ஸ்**
சென்னை: 044 - 55345081; 082; 92822 31774
கோவை: 0422-3950482; 4356967; 9381036344
E-Mail:sritrave@satyam.net Web:sreetravels.net

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!

ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் தீமை உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திரமுண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் மறையகம் பாபா. உடனே அணுக வேண்டிய முகவரி



அருள்
**மறையகம்**

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ. 3, அப்துல் ரசாக் தெரு, நூர்ஜஹான் தியேட்டர் எதிரில் (தற்போது ராஜ் தியேட்டர் என்று பெயர் மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை,
சென்னை – 600 015. ☎போன் : 2435 1190, 2433 2047.
செல்போன் : 98404 11551

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சினை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சினைகளை எழுதி, ரூ. 10 (ஸ்டாம்ப்) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.

"இயக்குநர் விஷ்ணுவர்தன் 'தவமாய் தவமிருந்து' போஸ்டர் மட்டும் பார்த்தே என்னைப் 'பட்டியல்' படத்துக்கு புக் பண்ணினாரு. எனக்காகவே அவர் 'தவமாய் தவமிருந்து' படத்தைப் பார்க்கலை. 'நான் பத்மபிரியாவை புது முகமாவே பார்க்கறேன். அப்போதான் எனக்கு எந்தப் பாதிப்பும் இருக்காது'ன்னு சொல்லிட்டாரு. ஆனா நான் உடனே விஷ்ணுவர்தன், ஆர்யா படங்களைத் தேடித் தேடிப் பார்த்தேன். ரெண்டு பேரோட திறமை, அலைவரிசை, சிந்தனை எல்லாம் விரல் நுனியில வெச்சுக்கிட்டேன்'' என்று பட்டாசு மாதிரி படபடவெனப் பேசுகிறார் பத்மபிரியா. பட்டியலில் இவர் ஏற்ற சரோ கதாபாத்திரம் ரசிகர்களிடையே அதிர்வலைகளை ஏற்படுத்தியுள்ளது.

''சரோ சேரியில வாழற பெண். நான் வட இந்தியாவுல வாழ்ந்த தமிழ்ப் பெண். சேரிப்பெண் எப்படி இருப்பான்னுகூடத் தெரியாது. சரோவுக்கு ஒன்பது ஸீன்; ரெண்டு பாட்டு; மூணே மூணு உடைகள்தான். என் ஒரிஜினல் கலரிலிருந்து மூணு கலர் கம்மியாத்தான் மேக்கப்'' என்றவர், விஷ்ணுவர்தனுக்கும் 'பட்டியல்' படத்துக்கும் ஏகமாய் கொடிபிடிக்கிறார்.

''தமிழ், மலையாளம்னு எட்டுப் படங்கள் பண்ணிட்டேன். பொதுவா ஒரு படம் ஒப்புக்கிறதுக்கு முன்னாடி ரெண்டு நாள் மோவாயைத் திருகி, ரொம்...ப யோசிச்சுதான் முடிவெடுப்பேன். ஆனா 'பட்டியல்' கதையைக் கேட்டவுடனே 'பண்ணலாம் விஷ்ணுவர்தன்'னு தலையாட்டிட்டேன். 'பட்டியல்' உண்மையிலேயே நவீனமான தமிழ்ப்படம். எந்தவொரு படத்துக்கும் ஹீரோவெல்லாம் முக்கியமே யில்லை. இயக்குநர்தான் படத்தோட முதுகெலும்பு. அவர் எப்படியோ அப்படித்தான் படமும் அமையும். ஒரு ஆக்ஷன் படத்துல உணர்வுகளுக்கும் முக்கியத்துவம் கொடுத்து, கதாபாத்திரங்களுக்கிடையே அழகான உறவு முறைகளும் அமைச்சு பிரமாதப்படுத்தியிருக்கிறாரு விஷ்ணுவர்தன். இந்த மாதிரி படத்துல அஞ்சு ஹீரோயின்ஸ் இருந்தாகூட தைரியமா நடிக்கலாம்.'' மூச்சு வாங்குகிறது பத்மப்ரியாவுக்கு.

''ஒரு படத்துல எவ்வளவு ஸீன் பண்றோம்ங்கிறது முக்கியமில்லை. நம்ம பாத்திரம் கதைக்குப் பயன்பட்டு நம்மையும் அடுத்த படிக்கு ஏற்றினா சரிதான். 'தவமாய் தவமிருந்து' படத்துல கூட எனக்குப் பெரிய வித்தியாசமான ரோல் இல்ல. ஆனா நல்ல ரோல். இருந்தாலும் எல்லா காட்சிகளும் பாராட்டுகளும் போய்ச்சேர்ந்தது சரண்யா மேடமுக்குத்தான்'' என்றவர், பட்டியலில் ஒரு கெட்ட ஆட்டமும் போட்டிருக்கிறார்.

''ஆமா... ஆமா... அந்தப் பாட்டு எல்லோருக்கும் ஒரு இன்ப அதிர்ச்சிதான். ஆனா நான் அந்தப் பாட்டுக்காகத்தான் பட்டியல்ல நடிக்க ஒப்புக்கிட்டேன். நிஜ வாழ்க்கையில பத்மபிரியா காக்ரா சோளி போட்டுக்கூட ஆடமாட்டா. ஆனா சரோ ஆடுவாளே. நான் என்ன செய்ய முடியும்? நான் பண்ணின முதல் டூயட்டே இதுதான். மலையாளப் படத்துல எல்லாம் நானும் ஹீரோவும் பத்தடி தள்ளி நின்னுதான் டூயட் பாடுவோம். காதுல விழுமான்னுகூடத் தெரியாது.''

அடுத்து வசந்த் இயக்கத்தில் 'சப்தம் போடாதே' படத்தில் ப்ருத்விராஜுக்கு ஜோடியாக நடிக்கிறார். கூடவே சில மலையாளப் படங்களும்.

'காதல்' படத்துக்கு எதிராகப் பேட்டிகள் கொடுப்பது பற்றிக் கேட்டால் அலறுகிறார். ''எனக்கு ரொம்பப் பிடிச்ச படம் 'காதல்'. ஒரு சாதாரண கதையை பாலாஜி சக்திவேல் என்ன அழகா படமாக்கியிருக்காரு. முதன்முறையா அவரையும் பரத்தையும் நான் சந்திச்சபோது, 'காதல்' படத்தைப் பத்தி எவ்வளவு உருகினேன்னு அவங்களுக்கு நல்லாவே தெரியும்''.

சநகன்

# திருச்செல்வம் திகுதிகு...

**'கோலங்கள்' மெகா சீரியல் தற்போது அறுநூறு எபிசோடுகளையும் தா...ண்டி போய்க்கொண்டிருக்கிறது. 'பிடிச்சு இழுக்கறாங்கப்பா' என்கிற குரல் எழும்பத் தொடங்கியிருக்கிறது. இந்த விமர்சனத்துக்கு என்ன பதில் சொல்கிறார் அதன் இயக்குநர் திருச்செல்வம்...?**

***சமீபகாலமாக கதையில் ஒருவித 'இழுவை' இருப்பதாகக் கூறப்படுகிறதே... 1000 எபிசோடுகளுக்குக் கொண்டு வரும் திட்டமோ?***

*(சிரிக்கிறார்)* "இன்னிக்கு டி.ஆர்.பியில நம்பர் ஒன் கோலங்கள்தான். இன்னும் சொல்லப்போனா, எங்களுக்கு அடுத்த இடத்துல இருக்கற சீரியல்கள் ரொம்பவும் பின்தங்கித்தான் இருக்காங்க. 'இழுவை'ன்னு மக்கள் நினைச்சா, இந்த அளவுக்கு டி.ஆர்.பியில இருக்க முடியாதே... பல புதிய கதைகள் இணைக்கப்பட்டு, சுவாரஸ்யம் அதிகரிக்கப்பட்டிருக்கு. கங்கா போல வித்தியாசமான கதாபாத்திரங்கள் கதையில அறிமுகமாயிருக்கு. அதனால் சீரியல் நல்லாத்தான் போயிட்டிருக்கு. அதுக்காக எல்லாருமே ரசிக்கிறாங்கன்னு சொல்ல முடியாது. வெறுக்கறவங்களும் இருக்காங்கதான். ஆனா, எங்க சீரியலை ரசிப்பவர்களோட சதவிகிதம், வெறுப்பவர்களைவிட ரொம்ப அதிகம். ஸோ, இழுவைன்னு சொல்றது தப்பு."

**புதிய கேரக்டர்களைக் கொண்டு வந்து, அவர்களுக்கான காட்சிகளுக்கு முக்கியத்துவம் தரும்போது பிரதான கதை மாறிவிடாதா?**

"ரெண்டரை மணி நேரப் படத்துக்கே 10, 20 கேரக்டர்கள் தேவைப்படுறப்போ ரெண்டு வருஷத்துக்கு மேல ஓடிட்டு இருக்கற சீரியலுக்கு சப்போர்ட்டிங் கேரக்டர்கள் தேவைப்படாதா... அந்த கேரக்டர்களை அப்படியே விட்டுட முடியுமா.... அவங்களுக்காக சில காட்சிகள் வச்சுத்தான் ஆகணும். இல்லன்னா, 'கோலங்கள்'ல பல கேரக்டர்கள் டம்மின்னு சொல்வீங்க. அப்படி யாரும் சொல்லாத மாதிரி காட்சிகள் வைக்கப்படுது. இதுதான் நடக்குதே தவிர, வேற ஒண்ணுமில்ல. இதனால மெயின் கதையெல்லாம் மாறாது. அது அப்படியே போயிட்டிருக்கும்."

**சப்போர்ட்டிங் கேரக்டர் சேர்க்கலாம் சரி, ஆனால் கங்கா மாதிரியான கேரக்டர்கள் பிரதான கேரக்டரான அபியையே மறைத்துவிடும் போலிருக்கிறதே...**

"'கோலங்கள்'ங்கறது அபிங்கற ஒரு பெண்ணோட தனிப்பட்ட பயோகிராஃபியா என்ன...? இது பல பெண்களோட கதை. கங்காங்கறவ நல்லவளா... கெட்டவளான்னு இனம் காணவே முடியாத அளவுக்கு வித்தியாசமான கேரக்டர். அவள் அபிக்கு எதிரியும் இல்ல. தோழியும் இல்ல. இன்னும் போகப் போக அந்த கேரக்டர் மேலும் மெருகேற்றப்படும். அபி கோலங்களோட லீட் கேரக்டர். அதுக்காக, தேவயானி சம்பந்தப்பட்ட காட்சிங்கதான் வரணும்னே எதிர்பார்க்க முடியாது. அதுவும் வரும். இன்னும் சில காட்சிகளும் வரும்."

**கங்கா என்ற கேரக்டர் கதை தயாரிப்பின்போதே உருவாக்கப்பட்டதா... இல்லை தேவயானி இல்லாத நாட்களில் சமாளிப்பதற்காக உருவாக்கப்பட்டதா...?**

"இல்லை... எட்டு மாசத்துக்கு முன்பே உருவாக்கப்பட்டதுதான். இடையில வந்தாலும் அது பவர்ஃபுல்லான கேரக்டர். இன்னும் சொல்லப்போனா, ஆதி கேரக்டர் கூட இடையில வந்ததுதான். இன்னிக்கு அவரை அப்படிச் சொல்ல முடியுமா..."

**ஆனா, உங்களுக்கு ஜோடியாக கங்காவைப் போட்டு, உங்கள் கேரக்டருக்கு அதிக முக்கியத்துவம் தரப்படுகிறது என்கிறார்களே...**

"நான்தாங்க இயக்குநர். நான் நினைச்

தேவ்

சிருந்தா முதல்நாளே எனக்கு முக்கியத்துவம் கொடுத்து ஸ்கிரிப்டை மாத்தியிருக்க முடியும். ஆனா நான் அப்படிச் செய்யல. உண்மையில தேவயானிக்கு ஷூட்டிங் வர முடியாத சூழ்நிலை உருவானப்போ, அவரோட தொடர்புடைய மத்த கேரக்டர்களைக் காட்ட முடியல. அந்தச் சமயத்துல தான் கங்காவைக் கொண்டு வந்தோம். அதுதான் விஷயமே தவிர, எனக்கு ஜோடி சேர்த்து அதன் மூலமா எனக்கு முக்கியத்துவம் கொடுத்துக்கணும்ங்கற எண்ணம் எனக்கு இல்ல."

**இப்போதே 600 எபிசோடுகள் வந்துவிட்டன. இன்னும் எவ்வளவு போகும்... அதிக எபிசோடுகள் ரசிகர்களை சோர்வடையச் செய்துவிடாதா...?**

"அவ்ளோ கஷ்டப்பட்டு

# "போரடிச்சதுன்னா டீ.வி.யை நிறுத்திடுங்க!"

சீரியல் பார்க்கணும்னு அவசியம் இல்லயே.. போரடிச்சதுன்னா டீவியை நிறுத்திடுங்க. இல்ல சேனலை மாத்திடுங்க... அவ்ளோதான். ஆனா ஒரு விஷயம், இந்த மாதிரி போரடிக்கற அளவுக்கு 'கோலங்கள்' வந்துடலை. வரவும் வராது. அந்த உறுதியை என்னால தர முடியும்."

**எபிசோடுகளை நிர்ணயிப்பது கதையா இல்லை தயாரிப்பாளர்களா...?**

"கோலங்களைப் பொறுத்தவரைக்கும் கதை, திரைக்கதைதான் எபிசோடுகளை முடிவு பண்ணும். வர்த்தகம் இருந்தா எத்தனை எபிசோடுகள் வேணும்னாலும் கொண்டு போகலாம். இந்த விஷயத்துல எங்க தயாரிப்பாளர்கள் எந்தத் தலையீட்டையும் செய்றதில்ல"

**அடுத்த ப்ராஜெக்ட் என்ன?**

"கண்டிப்பா சினிமாதான். அதுக்காகத் தானே இந்த ஃபீல்டுக்கே வந்தேன்."

**- ஆர். முத்துக்குமார்**

படம்: **ஸ்ரீஹரி**

இண்டர்வியூவுக்குத் தாமதமாகிவிட்டது என்கிற பதற்றம் அந்த இளைஞனுக்கு. காசைப் பற்றிக் கவலைப்படாமல் கால்டாக்ஸி பிடித்தான். சீறிப் பாய்ந்தது டாக்ஸி. அடடா, டிராஃபிக் ஜாம்! சுற்றிலும் காதைப் பிளக்கும் ஹாரன் இரைச்சல்கள். அங்கிருந்து போக ஒரு குறுக்கு வழி இருப்பது அந்த இளைஞனுக்குத் தெரியும். ஓட்டுநரிடம் சொல்லலாம் என்று சற்றுமுன்னே சாய்ந்து அவருடைய தோள்களைத் தட்டினான். அவ்வளவுதான். அலறிப் புடைத்து. ஆக்ஸிலேட்டரை அழுத்தி முன்னால் நின்ற டூவீலர்களில் மோதி, ரோடு டிவைடரில் முட்டி மயங்கிச் சாய்ந்தார் ஓட்டுநர்.

அவரது சட்டைப் பையிலிருந்தே சில்லறை எடுத்து சோடா வாங்கி முகத்தில் தெளித்து உலுக்கி எழுப்பினான் இளைஞன். கண் விழித்த ஓட்டுநர், தன் முகத்தில் வழிந்த சோடா, அசடு இரண்டையும் அழுந்தத் துடைத்துக்கொண்டு சொன்னார். "நான் கால்டாக்ஸி ஓட்ட வருவதற்கு முன்பாக பிண ஊர்தி ஓட்டிக் கொண்டிருந்தேன். அதே ஞாபகம் எனக்கு. பின்னால் இருந்து நீங்கள் தோள்களைத் தட்டிக் கூப்பிட்டதும் பழைய ஞாபகத்தில் பயந்து அலறிவிட்டேன்".

# பலத்தைப்

# மரபின்மைந்தன் முத்தையா



பழைய ஞாபகங்களின் பயங்களைச் சுமந்துகொண்டே பலர் இன்று புதிய முயற்சிகளை மேற்கொள்ளத் தயக்கம் காட்டு கிறார்கள். தோற்றுவிடுவோமோ என்கிற அச்சம், பல நல்ல வாய்ப்புகளையெல்லாம் விரட்டியடித்து விடுகிறது.

ஆங்கிலம் ஒருவகையில் பார்த்தால் சோம்பேறித்தனமான மொழி. சில வாக்கியங்களை முழுமையாக உச்சரிக்க சோம்பல்பட்டுக்கொண்டு அவற்றை வார்த்தைகளாகச் சுருக்கிக் கொண்டிருப்பார்கள். அச்சத்தைக் குறிக்கிற FEAR கூட அப்படித்தான். அது வார்த்தையல்ல, ஒரு வாக்கியத்தின் சுருக்கம். False Evidence Appearing Real உண்மைபோல் தோற்றமளிக்கும் தவறான அபிப்ராயம்.

ஒரு விஷயம் நம்மால் முடியுமா என்று முயற்சித்துப் பார்க்கிறோம். அதற் கொரு விளைவு ஏற்படுகிறது. அந்த விளைவு உடனடி விளைவே தவிர, அதுவே நிரந்தரமான விளைவு அல்ல. உதாரணமாக, சின்ன வயதில் சைக்கிள் ஓட்டிப் பழகியிருப்பீர்கள். முதல்முறை விழுந்தபோது முட்டி பேர்ந்திருக்கும். ஹாண்டில் பார் அஷ்ட கோணலாய் வளைந்திருக்கும். அது உடனடி விளைவு. மறுபடி எழுந்து, முழங்கை துடைத்து, ஹாண்டில்பார் நிமிர்த்தி, கொண்ட இலட் சியத்தை குரங்குப் பிடியாய்ப் பிடித்து குரங்குப் பெடல் போட்டு, மெல்ல மெல்ல ஓட்டிப் பழகிவிட்டால் (குரங்குப் பெடல் என்கிற வார்த்தைகூட அப்படித்தான் வந்திருக்குமோ...), சைக்கிள் ஓட்டுகிற கலை கைவந்துவிடுகிறது.

எனவே உடனடி விளைவைப் பார்த்துவிட்டு 'நம்மால் முடியாது' என்று நகர்ந்து கொள்பவர்கள் ஜென்மத்துக்கும் சைக்கிள் பக்கமே போக மாட்டார்கள். உடனடி விளைவைக் கருத்தில் கொள்ளாமல் தொடர் முயற்சிகளை மேற் கொண் டவர்கள்தான் ஓர் உண்மையைக் கண்டுபிடித்தார்கள். என்ன உண்மை தெரியுமா? 'உலகில் தோல்வி என்பதே இல்லை' என்பதுதான் அது.

சில விஷயங்கள் மீதான முன் முடிவுகளை மாற்றிக் கொண்டுவிட்டால் எந்த விதத்திலாவது வெற்றி சாத்தியமாகிவிடுகிறது.

தகவல் தொடர்பு என்கிற துறையையே எடுத்துக் கொள்ளுங்கள். அதில் முன்னேறவிடாமல் தடுப்பது தாழ்வு மனப்பான்மைதான். தாழ்வு மனப்பான்மை இருப்பவர்களால் சரளமான தகவல் தொடர்பில் வெற்றிபெற முடியாது என் பதே ஒரு முன்முடிவுதானே தவிர உண்மையல்ல என்பதை ஒருவர் நிரூபித்தார்.

அவரது இயற்பெயர் சார்லஸ். எல் டாக்ட்ஸன். புகைப்படக் கலையிலும், நாவல் எழுதுவதிலும் அவருக்கு ஆர்வமுண்டு. ஒரு காது கேட்காது. திக்குவாய் பிரச்னையும் உண்டு. உடனே மற்றவர்களோடு பழகுவதற்கு வெகுவாக அஞ் சினார். இந்தக் குறைகளை மனதில் கொண்டு அவர் திருமணமே செய்து கொள்ள வில்லை. ஆனால் அவருக்குக் குழந்தைகள் என்றால் கொள்ளைப் பிரியம். குழந்தைகளோடு நெருங்கிப் பழகினார். அப்போதுதான் அவருக்கே ஒரு விஷயம் ஆச்சரியமாய் இருந்தது. குழந்தைகளோடு அரட்டை யடிக்கிறபோது வாய் திக்கு வதில்லை. சரளமாகப் பேச முடிகிறது என்பதுதான் அது. எனவே, எப்போதும்

# பட்டியலிடு!

குழந்தைகளுடனே நேரத்தைச் செலவிடத் தொடங்கினார். அவர்களை சின்னச் சின்ன சுற்றுலாக்களுக்கு அழைத்துப் போவார். அப்போது குழந்தைகளுக்குக் கதை சொல்ல அவர் உருவாக்கிய கற்பனைப் பாத்திரத்தின் பெயர் ஆலிஸ். அவர்தான் 'லூயிஸ் கேரோல்' என்று பெயருடன் உலகின் மிகப் பிரபலமான குழந்தைகள் எழுத்தாளராகப் பெயர் பெற்றார். 'அதிசய உலகில் ஆலீசின் சாகசங்கள்' என்கிற அவரது கதைகள் உலகக் குழந்தைகளால் இன்றும் விரும்பிப் படிக்கப்படுகின்றன.

"முதல்முறையாக ஆலிஸ் என்ற கதாநாயகியை, குழந்தைகளுக்குக் கதை சொல்லும்போது அறிமுகப்படுத்தினேன். அவளை அடுத்து என்ன செய்யப் போகிறோம் என்றே தெரியாமல், 'ஆலிஸ் ஒரு முயல் பொந்துக்குள் நுழைந்தாள்' என்று குருட்டாம் போக்கில் கதை சொல்லத் தொடங்கினேன்" என்று பின்னாளில் சொன்னார் அவர்.




தோல்வி பற்றிய அச்சங்கள் எல்லாமே, உண்மைபோல் தோற்றமளிக்கும் தவறான அபிப்பிராயங்கள்தான். தோல்வி பயத்தை விரட்டுவதற்குச் சரியான வழி, நமது பலங்கள் என்னவென்று பட்டியல் போட்டுக் கொள்வது.

பலங்களைத் தெரிந்துகொண்டால் மட்டும் போதாது. பயங்களை உதறி, அவற்றை நடைமுறைப்படுத்தும் பொறுப்பையும் ஏற்க வேண்டும். நடைமுறைப் படுத்தினால் மட்டும் போதாது. அவற்றை முழுமையாக நம் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க வேண்டும்.

தனி வாழ்வில், படிப்பில், வேலையில், தொழிலில் என்று எல்லா இடங்களிலுமே பயன்படும் இந்த முக்கோண முன்னேற்றச் சூத்திரத்தை ரான் ஹபார்ட் என்ற நிர்வாகவியல் நிபுணர் 1960-ல் அறிமுகம் செய்தார்.

அறிதல் - பொறுப்பேற்றல் - நிர்வகித்தல்... இந்த முக்கோணத்துக்கு KRC Triangle என்று பெயர் (Knowledge, Responsibility, Control). இவை மூன்றுமே ஒன்றுக்கொன்று தொடர்புள்ள விஷயங்கள்தான். ஒன்றைப் பற்றி முழுதாக அறிந்துகொள்ளாமல் அதற்குப் பொறுப்பேற்கவோ அதனை நிர்வகிக்கவோ முடியாது. நம்மால் ஒன்றை நிர்வகிக்க முடியும் என்று நன்றாகத் தெரிந்தால்தான் அதற்கு நம்மால் பொறுப்பேற்க முடியும்.

நம்மால் நிர்வகிக்க முடியும் என்ற நம்பிக்கை, அதனை நன்கு அறிந்து கொள்வதால் மட்டுமே ஏற்படும். இந்த முக்கோணத்தை வலிமையாக்கிக் கொண்டால் முன்னேற்றம் நிச்சயம்.

தயக்கங்களைத் தள்ளுபடி செய்துவிட்டு, அசலான வலிமையை மட்டும் கணக்கில் எடுத்துக் கொள்ளுங்கள். வாழ்நாள் முழுவதும் வெற்றிகளை வரவு வையுங்கள்.

(தொடரும்)

# கீழ்ப்படிதல்...

'சுச்ரூஷை' என்று ஒன்று நாம் சொல்கிறோம். குரு சுச்ரூஷையையே சிஷ்யனுக்குத் தலையான கடமையாகச் சொல்கிறோம். அதற்கு நேர் அர்த்தம் 'கேட்டுக் கொள்கிறது'தான்.

ஆக, கீழ்ப்படிதல் என்பதற்கு இங்கிலீஷ் வார்த்தையான ஒபீடியன்ஸ், பணிவிடை என்பதற்கு நம் தேசத்து வார்த்தையான சுச்ரூஷை ஆகிய இரண்டும் 'கேட்டுக் கொள்வது' என்ற ஒரே அர்த்தத்தின் அடியாகத்தான் இருக்கிறது. கீழ்ப்படிவதும் பணிவிடையும் ஒன்றையொன்று இட்டு நிரப்பிக் கொள்கிற விஷயங்கள். இரண்டிற்கும் இரண்டு வேறே பாஷைகளில் ஒரே அர்த்தம். ஏன் அப்படி இருக்கணுமென்றால்...

'கேட்டுக் கொள்வது' என்றால், என்ன கேட்டுக் கொள்கிறோமோ அந்தப்படியே செய்ய வேண்டும் என்பதுதான் உள்ளர்த்தம். 'சொன்னதைக் கேளு', 'சொன்னபடி கேக்கறதில்லே' என்றெல்லாம் சொல்லும்போது அதுதானே அர்த்தம்? 'Hear'-கும் அந்த அர்த்தமுண்டு. பெரியவர்கள் சொன்னபடி நடப்பதுதான் நிஜமான சுச்ரூஷையும் ஒபீடியன்ஸும். அதனால்தான் அப்படி வார்த்தைகள் ஏற்பட்டிருக்கின்றன.

ரொம்பப் பொருத்தமாக ஒன்று தோன்றுகிறது. ஒபீடியன்ஸைக் கீழ்ப்படிதல் என்று சொல்கிறோம். உடம்பு பூராவையும் வாஸ்தவமாகவே கீழே பூமியிலே படியவிட்டுக் கிடப்பதுதான் ஸாஷ்டாங்க நமஸ்காரமாக இருக்கிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்



அருள்வாக்கு



பல வருஷம் வராத ரெண்டாம் பிள்ளை இப்பொழுது ஏமாற்றாமல் பொறந்த மண்ணுக்கு வந்துவிட்டான். மாட்டு வண்டியில் பிரயாணம் பண்ணும் ஊருக்கு தும்பைப்பூ போன்ற வெள்ளை காரில் வந்து இறங்கினான்.

ரெண்டாம் பிள்ளை வந்ததும் வராததுமாய் தான் வளர்த்த வீட்டை ஓடி ஓடி பார்ப்பான் என்று எதிர்பார்த்த விசாலாச்சிக்கு வியப்பாக இருந்தது. காரை விட்டு இறங்கிய மகன் இப்பொழுதுதான் காரையே பார்ப்பதுபோல சுற்றிச் சுற்றி வந்து பார்த்தான். இந்த காரை இப்படிச் சுற்றிப் பார்க்கவா அங்கிருந்து இங்கு வந்தான் என்று வருத்தமாக நினைத்துக்கொண்டாள் விசாலாச்சி.

காரில் இருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்து கதவில் அப்பிக் கொண்ட சாக்கடையைக் கழுவினான். சக்கரத்தில் மாட்டிய செடி கொடிகளை அப்புறப் படுத்தினான். சக்கரத்தைத் தட்டிப் பார்த்தான். நான்கு சக்கரங்களோடு கார் நன்றாக இருப்பது தெரிந்த பிறகுதான் அப்பாவிடம் திரும்பி, "நீங்க நல்லா இருக்கிங்களாப்பா?" என்று கேட்டான். அதன் பிறகுதான் காருக்குள் இருந்து மருமகளும் பேரனும் கீழே இறங்கினார்கள்.

பேரனைப் பார்த்ததுமே விசா

## எழில்வரதன்

லாச்சிக்கு சந்தோஷத்தில் முகம் வீங்கிப் போனது. 'பாருங்கடி... எம் பேரன் அழக பாருங்க. எம் மருமக அழக பாருங்கடி...' ஆரத்தி எடுத்து முடித்து மருமகளை 'உள்ளே வா' என்று சொல்லிவிட்டு வீதி ரெண்டு பக்கமும் தன் பேரனைப் பார்த்து அதிசயிக்கும் கிழவி களைப் பார்த்து ஆலத்தண்ணியை ஊற்றிவிட்டுப் படியேறி நிமிர்ந்து வீட்டுக்குப் போனாள்.

வீட்டுக்குள் வந்தவர்களை புதுப்பாய் எடுத்துப் போட்டு உட்கார வைத்தாள். பேரனையும் மருமகளையும் அதிசயமாய்ப் பார்த்தாள். இந்த வீட்டில் இருக்கும்போது பிடுங்கித் தின்னும்

அழகில் இருக்கிறான் மருமகன். ஊரில் இப்படி அழகான மருமகன் எவனுக்குத்தான் வாய்த்திருக்கிறது. வீட்டின் நடுவில் மகாலட்சுமி இன்றைக்குத்தான் வந்து உட்கார்ந்தது போன்ற பிரகாசம்

# அந்நியன்

தன் மருமகளைச் சுற்றி இருப்பதைக் கண்கூடாகக் கண்டாள்.

"விசாலாச்சி... வந்தவங்களுக்கு ஒரு வாய் தண்ணி குடு" என்று பரமன் சொன்னதும்தான் கொஞ்சமாக நினைவு பெற்றாள் விசாலாச்சி.

"அய்யோ... மறந்து போச்சி" என்று தலையில் அடித்துக்கொண்டு ஓடிப்போய் புதுக் குடத்தில் சுத்தமாய் பிடித்து வைத்திருந்த தண்ணியை, புளி போட்டு விளக்கிய சுத்தமான பித்தளைச் சொம்பில் கொண்டு வந்து கொடுத்தாள். மருமகன் வாங்கிக்கொண்டான்.

"கெணத்து தண்ணியாம்மா இது... வேணாம் சுதா, அத குடிக்காத கெணத்தில பாசியும் மீனுமா இருக்கிற தண்ணி, சளி பிடிக்கப் போவது" என்று தடுத்த ரெண்டாம் பிள்ளை காருக்குப் போய் ஒரு பெரிய வெள்ளை கேனை எடுத்து வந்து அதில் இருந்த தண்ணியை பித்தளைச் சொம்பில் பிடித்து மருமகளுக்குக் கொடுத்தான். தானும் குடித்தான். சுத்தமான தண்ணி குடிக்கிறது தப்பில்லைதான். ஆனால் அம்மா கொடுத்த தண்ணியை சொம்போடு வீதியில் ஊற்றிவிட்டானே ரெண்டாம் பிள்ளை.

'புதுத் தண்ணி குடிச்சா ஒடம்புக்கு நோவு வந்துட்டா ஒரு வாரம் தங்கப்போற பச்ச புள்ளைக தாங்குமா? இதான் சரி' என்று தனக்குத்தானே சமாதானம் ஆன விசாலாச்சி, சாப்பிடுவதற்காக பாய்போட்டு, தலைவாழை இலைபோட்டு, "வாங்க கண்ணு சாப்பிடுங்க" என்று கை கழுவத் தண்ணீர் கொடுத்தாள். இந்தத் தண்ணியில் கையாவது கழுவுவார்களா என்று பயந்தாள் அவள். ஆனால் நல்ல வேளை வாங்கி கைகழுவிக்கொண்டார்கள்.

சந்தையில் பார்த்துப் பார்த்து வாங்கிய அரிசியில் செய்த சோறு போட்டாள். கொழுத்த கோழி அடித்து காரம் குறைச்சலாக மணக்க மணக்க குழம்பு வைத்திருந்தாள். ருசி பார்த்துச் சொல்லச் சொல்லி பரமனையும் அம்மாக்கண்ணையும் உசிரை எடுத்துவிட்டாள். குழம்பு நன்றாக இருப்பதாகத்தான் அவர்கள் சொன்னார்கள். ஆனாலும் மகனும் மருமகளும் நன்றாக இருப்பதாகச் சொன்னால்தானே மனசு ஆறும்.

முழுக் கரண்டி கறியை எடுத்து மருமகளுக்கு வைத்தாள். "நல்லா சாப்புடு கண்ணு. காரம் கொறைச்சு தான் வெச்சிருக்கேன்... முட்டை வெக்கிற பருவத்தில இருந்த கோழி... ருசியா இருக்கும்" என்றாள்.

மருமகள் சட்டென்று கையை பின்னால் இழுத்துக் கொண்டாள். "கோழிக்கறியா? ஐயோ அத்த எனக்குப் பிடிக்காதே, அத்தை" என்றாள்.

"ஏந் தாயி, அங்க நீ கறி திங்கறத நாம் பாத்தேனே..."

"அவ கோழிக் கறி திம்பாம்மா... ஆனா நாட்டுக் கோழி

சாப்பிட மாட்டா. அதுங்க அரணை, பூரான், கரப்பான் பூச்சின்னு கண்டதை யும் சாப்பிடுதுங்கன்னு கொமட்டிக் கிட்டு ஓடிப்போயிடுவா'' என்று ரெண்டாம் பிள்ளை சொன்னான்.

''கடவுளே! தெரிஞ்சிருந்தா ஆட்டுக் கறி எடுத்து கொழம்பு வெச்சிருப்பேனே பாவி. சரி நீயாவது சாப்பிடு கண்ணு'' என்று மகனுக்கு குழம்பு ஊற்றப் போனாள்.

''அவ இந்தக் கறிதான் சாப்பிட மாட்டா. நான் எந்தக் கறியும் சாப்பிட றதில்லேம்மா. அதைவிட்டு ரெண்டு வருஷமாச்சி'' என்றான்.

கையில் கறிக்குழம்பு சட்டியோடு பரி தாபமாகப் பார்த்தாள் விசாலாச்சி. ''நான் வேற கொழம்பு வெக்கலை யேய்யா? அவ்ளோ தூரத்தில இருந்து வந்திருக்கீங்களே பசி எடுக்குமேய்யா? கொஞ்சம் பொறுங்க கண்ணு. நான் கத்திரிக்கா போட்டு பருப்புக் கொழம்பு வெச்சிடறேன். அதுவரைக்கும் இதச் சாப்பிடுங்க'' என்று சந்தையில் வாங்கி வந்த இனிப்பையும் காரத்தையும் எடுத்து தட்டில் வைத்தாள்.

இனிப்பின் நிறத்தைப் பார்த்து எடுக்க பேரன் கை நீட்டினான். விசாலாச்சி ஒன்றை எடுத்து கையில் கொடுத்தாள். ரெண்டாம் பிள்ளை அதை வாங்கி தட்டிலேயே வைத்துவிட்டான். ''என்னா எண்ணெயில செஞ்சதோ தெரியலையேம்மா. பாக் கவே பழசு மாதிரி இருக்கு. எங்கம்மா வாங்கின இதை?'' என்று அம்மாவிடம் கேட்டான். விசாலாச்சி ''சந்தையிலே கண்ணு...'' என்றாள்.

''இன்னும் சந்தைப் பலகாரம் தின்னா ஒடம்பு தாங்குமாம்மா? நீங் களும் தின்னாதீங்க'' என்றான்.

''இத்தனை நாள் சந்தைப் பலகாரம் தின்னுதான் உசிரோட இருக்கோம் நாங்க'' என்று புலம்பியபடி பிஞ்சுக் கத்திரிக்காயில் குழம்பு வைத்துச் சாப் பாடு போட்டாள். அவர்கள் சரியாகச் சாப்பிட்ட மாதிரியே தெரியவில்லை. ஏதோ கை நனைத்தார்கள். இந்த வேதனை வேறு விசாலாச்சியை வாட் டியது.

வெயில் தாழ ஆரம்பித்ததும் ''சரிம்மா நேரமாச்சு நாங்க கௌம் பறோம்'' என்று ரெண்டாம் பிள்ளை சொன்னதும் அதிர்ந்து போனாள் விசாலாச்சி.

''ஒரு வாரம் தங்கிப் போறேன்னு சொன்னியே கண்ணு''

''ஆமாம்மா. ஆனா லீவு கெடைக் கல. எங்க மேனேஜர் வீட்டு கல்யாணத்துக்கு சிதம்பரம் போக வேண்டிய கட்டாயம். சரி பாத்துட்டுப் போயிடுவோமேன்னு வந்தேன்.''

விசாலாச்சி அடக்க முடியாமல் அழுதுவிட்டாள். ''எப்ப போன புள்ளை இப்பத்தானே கண்ணு வந்தே. ஒரு ராத் திரி அப்பன் ஆத்தாவோட தங்கிட்டு போகக்கூடாதா... ஒரு மத்தியானம் இருந்துட்டு போறேங்கறியே... ஒரு வாய் சோத்தையும் ஒழுங்கா திங்கலையே... நாங் குடுத்த ஒரு வாய் தண்ணிய ஒழுங்கா குடிச்சியா நீ...''

''என்னம்மா இது. எதுக்கு அழறே... புதுத் தண்ணி ஒடம்புக்கு ஒத்துக் காதுன்னுதான் வீட்டுல இருந்த தண்ணி எடுத்துக்கிட்டு வந்தேன்.''

''தண்ணி ஒத்துக்கலையா பெத்தவங்ககூட இருக்கிறது ஒத்துக்கலையாய்யா... வயசான காலத் தில, சாகிற காலத்தில பேரன் புள்ளை களோட இருந்துட்டுச் சாகணும்னு உன்

''எங்க அப்பா நம்ம காதலை ரொம்ப சாதாரணமா எடை போட்டுட்டாரு...!''

''இதுக்குத்தான் நாம காதலிக்க ஆரம்பிச்சதுமே ISO 9002 சான்றிதழ் வாங் கிடலாம்னு சொன்னேன்...!''

- சித்ரா

அம்மாக்காரிக்கு ஆசை இருக்காதா நீ சொல்லு... கல்யாணத்தை எங்கியோ பண்ணிக்கிட்ட, புள்ளைய எங்கியோ பெத்துக்கிட்ட, அதுக்கு மொட்டை அடிச்சி காதையும் எங்கியோ குத்திக்கிட்ட.... ஒரு நல்லது கெட்டது, நோம்பு நொடின்னு வீட்டுக்கு வந்தியா நீ... ஆயிரம் காசு சம்பாதிக்கலாம் கண்ணு, ஆனா பெத்தவங்களுக்கு ஒரு மகனா நீ சிலது செய்யணும் தெரிஞ்சுக்கோ..." என்று விடாமல் அழுதாள்.

"ஒரு மகனா நான் என்ன யம்மா செய்யல சொல்லு, மாசா மாசம் பணம் அனுப்பறேனே...'

அதுவரையில் அமைதியாக இருந்த அம்மாக்கண்ணு கிழவி, "அடப்பயலே... மாசா மாசம் காசு தர்றவன்தான் மகன்னா இவளுக்கு தபால்காரன் தானேடா புள்ளையாவான். அவன்தானே மாசா மாசம் காசு தரான்" என்றாள்.

அதுவரை அமைதியாக இருந்த பரமன், "விசாலாச்சி, போகட்டும் விடு ஆபீசரு. ஒரு கலெக்டரு வந்து போனதா நெனைச்சிப்போம். மகன் பொறக்கல. அதனால வீட்டுக்கு வரலேன்னு நெனைச்சிக்குவோம்" என்றதும் ரெண்டாம் பிள்ளை அழுதுவிட்டான்.

"என்ன பேச்சுப்பா பேசறீங்க. நான் திமிர் எடுத்தா இதைச் செய்யறேன். சண்டை சச்சரவோடயா போறேன். என்னோட பொழைப்பு அங்க இருக்குப்பா. உங்க மேல பாசமில்லாமயா இருக்கேன். உங்க நல்லதுக்கு என்னென்னமோ செய்ய ஆசைப்படறேன்பா. அங்க வாங்க சவுகரியமா இருங்கன்னு சொல்றேனே..."

ரெண்டாம் பிள்ளை அழுவதைப் பார்த்துவிட்டு பக்கத்தில் நின்ற மருமகளும் அழுதுவிட்டாள். "சரி, அத்தை, நாங்க ஒருவாரம் இருந்துட்டே போறோம். விடுங்க" என்றாள்.

தன்னால் மகன் அழுவதைப் பார்த்து சங்கடப்பட்ட விசாலாச்சி கண்ணைத் துடைத்துக்கொண்டு சமாதானமாகச்



சொன்னாள், "வேணாந் தாயி, மேனேஜரு வீட்டு கல்யாணமுன்னான், போகாட்டி பொல்லாப்பு வரும். எப்பவும் ஒட்டிக்கிட்டே இருந்தாத்தான் ஒறவா என்ன. பிரிஞ்சிருந்தா பெத்தவ இல்லே, புள்ளை இல்லேன்னு ஆயிடுமா? இன்னொருமுறை வந்து இருந்துட்டாப் போவுது. கிளம்புங்க" என்றாள். மனசே இல்லாமல் கையை ஆட்டி அனுப்பி வைத்தாள்.

அவர்கள் போனபின்பு விசாலாச்சிக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. வந்து போனது சொந்த மகனா அந்நியப் பிள்ளையா என்று விளங்கவில்லை. ஒரு குடிகாரனாக, படிக்காதவனாக, சம்பாதிக்காத பிள்ளையாக இருந்திருந்தால்கூட தினத்துக்கும் பார்த்திருக்கலாமே என்று வருந்தினாள்.

தன் வம்சத்தின் கடைசிக் கொழுந்தை - தன் பேரனை வழியனுப்பும்வரை தொட்டுத் தூக்கி மார்பில் இறுக்கிக் கொள்ளாமலேயே இருந்ததை நினைத்து அவளுக்கு ஒரே துக்கமாக வந்தது. தனக்குள் கிளம்பிய பெரும் துக்கத்தை மறைக்க வழியற்ற, வயதாகி தள்ளாடிப்போன விசாலாச்சி, வீட்டின் பின்கட்டுக்குப் போய் நாவல் மரத்தை உலுக்கு உலுக்கு என்று உலுக்கியபடி அழுதாள். அவளுக்குத் தன் துக்கத்தைச் சொல்ல இப்பொழுது அந்த ஒற்றை மரத்தைத் தவிர வேறு நாதி கிடையாது. அவள் உலுக்கியதில் சில காய்ந்த சருகுகளை உதிர்த்து விட்டு பேசாமல் நின்றது அந்த நாவல் மரம்.

(முற்றும்)

இந்திய கிரிக்கெட்டில் சச்சினுக்கு என்றும் தனியிடம் உண்டு. ஆனால் சமீப காலமாக அவரின் விளையாட்டு திருப்தி யளிப்பதாக இல்லை. 'என்னாச்சு சச் சினுக்கு?' என்று கவலையில் ஆழ்ந்துவிட் டனர் இந்திய கிரிக்கெட் ரசிகர்கள். இன்னொரு பக்கம் 'கங் குலிக்கு ஒரு நியாயம். சச் சினுக்கு ஒரு நியாயமா?' என்னும் கூக்குரல்கள். இக் கட்டான இந்தச் சூழலில் இங்கிலாந்து உடனான ஒருநாள் தொடரில் சச்சினுக்கு இடமில்லை என அறிவிக்கப்பட் டிருக்கிறது. காயத் தைக் காரணமாக நிர் வாகம் காட்டியிருக் கிறதென்றாலும் அது மட்டும்தான் காரணமா என்பதுதான் இன்றைய மில்லியன் டாலர் கேள்வி. சச்சின் சகாப்தம் முடிந்து விட்டதா? கிரிக்கெட் விமர்சகர்கள் என்ன சொல்கிறார்கள்?



• சொக்கன்

''சச்சினால் இனிமேல் முன்பு போல ஆட முடி யாது... ஆகவே அவர் ஓய்வு எடுக்க வேண்டிய நேரம் வந்துவிட்டதாக நான் கருதவில்லை. சச்சின் தனது பழைய வேகத்தை இழந்துவிட்டார். எல்லாப் போட்டி களிலும் அவரால் சோபிக்க முடிய வில்லை என்பதெல்லாம் வாஸ்தவம்தான். இதற்கெல்லாம் காரணம் அவருக்கு வய தாகிவிட்டதுதான். தவிர, அடிக்கடி காயங்கள், ஆபரேஷன். ஆனாலும் ஆப ரேஷன் முடிந்த பிறகு மீண்டும் சச்சின் வருவார். மிகப்பெரிய சாதனை ஒன்றைச் செய்துவிட்டுத்தான் ஓய்வு பெறுவார். அது உலகக் கோப்பையை பெற்றுத் தருவ தாகவும் இருக்கலாம். அந்த நம்பிக்கை எனக்கு இருக்கிறது'' என்கிறார் டெக்கான் க்ரானிக்கல் ஸ்போர்ட்ஸ் எடிட்டர் மோகன்.



• மோகன்

ஆனால் ''வயதெல் லாம் ஒரு பிரச்னையே அல்ல... அப்படிப் பார்த் தால் டிராவிட் சச்சினை விட மூத்தவர். சச்சினுக்கு உடல் தேய்மானம் என் பது அணியில் இருக்கும் மற்ற வீரர்களைக் காட் டிலும் மிக அதிகம். அதன் காரணமாக அவருடைய ஆட்டத்தில் இருந்த அழகு சமீபகாலமாக குறைந்து விட்டது. ஆரம்பத்தில் சச்சினை பத்து ரன்களுக் குள் அவுட் ஆக்கிவிட வேண்டும். இல்லாவிட் டால் அதன்பிறகு மைதா னத்தில் வாணவேடிக்கை தான் நடத்துவார். ஆனால் இன்று அந்தக் கதை மாறிவிட்டது. இப் போதுள்ள நிலையில் சச்சின் ஆபரேஷனுக்குப் பிறகு நன்றாக விளை யாடுவார் என்று நிச்சய மாகச் சொல்ல முடியாது. இப்போது சச்சின் ஒரு முடிவெடுக்க வேண்டிய கட்டாயத்தில் இருக் கிறார். அதாவது டெஸ்ட் டில் விளையாடுவதா அல்லது ஒருநாள் போட்டிகளில் விளை யாடுவதா என்று முடி வெடுக்க வேண்டும். தற் போது சச்சின் இல்லா மலேயே ஒருநாள் போட் டிகளில் நம்மால் ஜெயிக்க முடியும். ஒருவேளை சச் சின் ஒருநாள் போட்டிக்கு வந்தால் மியான்டட், சலீம் மாலிக் பாணியில் தனது அனுபவத்தை வெற்றிக்காகப் பயன்படுத் தும் வகையில் விளையாட வேண்டும். அதேசமயம்

எல்லாப் போட்டிகளிலும் விளையாடாமல், அவ்வப்போது ஓய்வு எடுத்துக்கொண்டு விளையாடுவது அவருக்கு நல்லது. ஆபரேஷனுக்குப் பிறகு, கலந்துகொள்ளும் போட்டிகளில் எப்படி விளையாடுகிறார் என்பதைப் பொறுத்துத்தான் அவருக்கு வாய்ப்பளிக்க வேண்டும். அதைவிடுத்து, அவர் இத்தனை செஞ்சுரி அடித்திருக்கிறார்... இவ்வளவு போட்டிகள் விளையாடி இருக்கிறார்.. அனுபவஸ்தர் என்று காரணம் காட்டி, அவரை மீண்டும் அணிக்குக் கொண்டுவருவது அர்த்தமற்ற செயல்'' என்கிறார் கிரிக் இன்ஃபோவின் முன்னாள் நிர்வாக இயக்குநரான பத்ரி.

"ஒரு காலத்தில் கவாஸ்கர், கபில்தேவ் போன்ற வீரர்களுக்கு இந்த நிலை வந்துள்ளது. அவற்றையும் சச்சினையும் ஒன்றாகப் பார்க்கக்கூடாது. இப்போது சச்சினுக்கு ஆதரவாக இருக்க வேண்டுமே தவிர, எந்த விதத்திலும் எதிர்ப்புக்குரல் எழுப்பக் கூடாது'' என்பது நவ்ஜோத்சிங் சித்துவின் கருத்தாக இருக்கிறது.

சச்சினின் வாழ்க்கை வரலாற்றை எழுதியவரான என். சொக்கன் என்ன சொல்கிறார்?

"சகாப்தம் முடிந்தது என்று சொல்வதே அபத்தம். இன்னும் அவரால் ஐந்தாண்டுகள் மிகச் சிறப்பாக விளையாட முடியும். அதற்கான சக்தி அவரிடம் இருக்கிறது. மூன்று டெஸ்ட் போட்டிகளில் சரியாக விளையாடவில்லை என்பதற்காக சச்சினே அவ்வளவுதான் என்று சொல்லிவிட முடியாது. காயம் குணமடைந்த பிறகு தன்னால் நன்றாக விளையாட முடியும் என்று சச்சினே கூறியுள்ளார். ஆகவே, இனி கவலையே வேண்டாம். மீண்டும் அதே பலத்துடன் சச்சின் வருவார். சாதிப்பார். அவர் அணியில் இருப்பதே நம் அணிக்கு உணர்வுரீதியாக மிகப் பெரிய பலம். இளைஞர்கள் மற்றும் அனுபவஸ்தர்கள் குறைவாக இருக்கும் தற்போதைய அணியில் சச்சின் இடம் பெறாத பட்சத்தில் டெஸ்ட் போட்டிகளின்போது, குறிப்பாக வெளிநாட்டு



• பத்ரி

மண்ணில் கடுமையான சவால்களை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். ஆகவே சச்சினை அவசரப்பட்டுக் குறைத்து மதிப்பிட்டுவிடக் கூடாது. வேண்டுமானால் 2007 உலகக் கோப்பையை நாம் வென்ற பிறகு அவரது ஓய்வைப் பற்றி யோசிக்கலாம்'' என்கிறார்.

- ஆர். முத்துக்குமார்

# சச்சின்?



ஒரு பக்கம்

# ஈராக் சிரிக்கிறது!

**பா**க்தாத் மக்கள் ரப்பர் பந்துபோல குதித்துக் குதித்துச் சிரித்துக் கொண்டிருக்கிறார்கள். ஈராக் தொலைக்காட்சி வரலாற்றிலேயே முதல் முறையாக காமெடி ஷோ தொடங்கப்பட்டிருக்கிறது. அதுவும் எப்படிப்பட்ட காமெடி? வயிற்றைப் பிடித்துக்கொண்டு விழுந்து விழுந்து சிரிக்கும் காமெடிக் காட்சிகள். குர்த் சாட் எனும் சேனலை பிரதி செவ்வாய் தட்டினால் உலக இசை, டாக் ஷோ என்று கண்கவரும் நிகழ்ச்சிகள் பவனி வரும். வெள்ளிதோறும் காமெடி. அன்றாட வாழ்வில் நடைபெறும் சாதாரணக் காட்சிகளைக்கூட நகைச் சுவையாகச் சொல்கிறார்களாம் (யாருடைய அன்றாட வாழ்வில் என்று தெரியவில்லை).




'ஒரு சில நாட்களில் இந்த அற்புதம் நடந்திருக்கிறது. இதை நம்புவது கடினம். ஆனால் உண்மை'- இப்படி வாய்பிளந்து ஆச்சரியப்பட்டிருப்பவர் அமெரிக்க அம்பாஸிடர் கலீல்சாத்.

கிட்டத்தட்ட நூறு குஜாலான சேனல்கள் தொடங்கப்பட்டிருக்கின்றன. எல்லாம் அமெரிக்காவின் புண்ணியத்தில். டீவி போரடிக்கிறதா? அப்படியானால் ரேடியோவைத் திருகலாம். பல் தேய்த்து முடித்த கையோடு தொலைபேசியை அழுத்தினால், கேட்கும் பாடல் ஒலிபரப்பாகும். இந்த நிகழ்ச்சியின் பெயர் டிஜே ரஷித். இவர்களது சிறப்பம்சமும் காமெடிதான்.

சதாமின் சர்வாதிகார ஆட்சியை அகற்றிவிட்டு அந்த இடத்தில் சுதந்திர அரசை அமெரிக்கா நியமித்திருக்காவிட்டால் இத்தனை காமெடி மாற்றங்கள் நிகழ்ந்திருக்குமா?

ஈராக்கியர்கள் காமெடிப் பிரியர்கள் என்பதை மிகச் சரியாக உணர்ந்த அமெரிக்கா, நாமும் ஒரு காமெடி ஷோ நடத்தலாம் (ஏற்கெனவே புஷ் ஒரு ஷோ ஓட்டிவிட்டார்) என்று பொட்டியைத் தூக்கிக்கொண்டு பாக்தாத் போயிருக்கிறது. இந்த முறை சற்று வித்தியாசமாக முயற்சிக்கலாம் என்று யோசித்து இறுதியில் மெகா சீரியல் ஒன்றைத் தயார் செய்யும் முயற்சியில் இறங்கினார்கள். லொகேஷன் முடிந்து ஷூட்டிங்கூட தொடங்கியாகிவிட்டது. ஆனால் ஒரு சிறிய திருப்பம்... காமெடி நிகழ்ச்சியின் ஒருங்கிணைப்பாளர் ஒருவரை (பெயர் ஹமீத்) சில சீரியஸ் ஆசாமிகள் சுட்டுக் கொன்றுவிட்டனர். அமெரிக்கா சற்று பின் வாங்கியுள்ளது. மற்றபடி எந்த விதப் பிரச்னையும் இல்லை. இனி ஈராக்கில் பேச்சு சுதந்திரம் இல்லை, ஈராக்கியர்கள் சிரமப்படுகிறார்கள் என்றெல்லாம் வாய் புளித்ததோ மாங்காய் புளித்ததோ என்று யாரும் பேசிவிட முடியாது. ஒரு பாவமும் அறியாத அப்பிராணி புஷ்ஷையும் அனாவசியமாக யாரும் இனி பழிக்கக் கூடாது.

- மருதன்

‘பருப்பு இல்லாமல் கல்யாணம் இல்லை’ என்பது பழமொழி. ‘கருத்துக் கணிப்பு இல்லாமல் தேர்தல் இல்லை’. இதுதான் இன்றைய புதுமொழி. கருத்துக் கணிப்புகள் தங்களுக்குச் சாதகமென்றால் துள்ளிக் குதிப்பதும், பாதகமென்றால் எள்ளி நகையாடுவதும், அரசியல் அரங்கில் தலைவர் முதல் தொண்டர் வரை அனைவருக்கும் கைவந்த கலை. ஒரு முன்னணி வார இதழில் வெளிவந்து கொண்டிருக்கும் கருத்துக் கணிப்புகளைக் கடுமையாகச் சாடியிருக்கிறார் தி.மு.க. தலைவர் கருணாநிதி.

உண்மையில் கருத்துக் கணிப்புகளைக் கண்டு இத்தனை கலவரப்படுவது ஏன்? கருத்துக்கணிப்புகள் வாக்காளர்களின் மனநிலையில் எந்த அளவு பாதிப்பை ஏற்படுத்த முடியும்? ஊடகங்கள், தனியார் நிறுவனங்கள், ஆய்வு மாணவர்கள் என கருத்துக் கணிப்பில் களமிறங்குபவர்கள் மேற்கொள்ளும் உத்திகள்தான் என்ன? கணிப்புகளை ஒட்டுமொத்தமாகத் தடை செய்ய வேண்டும் என்று கோருவது சரிதானா? அடுக்கடுக்கான கேள்விகளோடு, அடிக்கடி கருத்துக் கணிப்பு சர்ச்சையில் சிக்கிக் கொள்ளும் லயோலா கல்லூரியின் காட்சித் தகவலியல் (விஷுவல் கம்யூனிகேஷன்) துறை பேராசிரியர் டாக்டர் ச.ராஜநாயகத்தைச் சந்தித்துக் கேட்டோம்.

“ஒரு கல்வி நிறுவனம் கருத்துக் கணிப்பு செய்து வெளியிட வேண்டிய அவசியம் கற்றுக்கொள்வது சாத்தியமில்லை. கற்றுத் தருவதில் மக்களைவிடச் சிறந்த ஆசிரியர்கள் இருக்க முடியாது. எனவேதான் தமிழக மக்களின் பண்பாட்டு - அரசியல் பார்வைகளையும், அப்பார்வைகளில் நிகழ்ந்துவரும் தொடர் மாற்றங்களின் போக்குகளையும், தொடர்ச்சியான கள ஆய்வுகள் மூலம் பதிவு செய்து வருகிறோம். இந்த மாற்றங்களை உருவாக்குவதில் மீடியாவின் பங்கு என்ன என்பதை அறிவதும் பாடத்திட்டத்தின் முக்கியமான நோக்கங்களில் ஒன்று. ‘நமது மக்களைப் புரிந்துகொள்ள பண்பாட்டு ரீதியாக என்னவெல்லாம் கேட்க வேண்டுமோ அத்தனையும் கேட்கிறோம். உதாரணமாக கடவுள் நம்பிக்கை குறைந்திருக்கிறதா? கூடியிருக்கிறதா? நிறுவனமயமாக்கப்பட்ட மதங்களின் செயல்பாடுகள் எப்படி இருக்கின்றன? கலப்பு மணத்தை ஆதரிக்கிறார்களா?’ என்று நூற்றுக்கும் அதிகமான தகவல்களைச் சேகரிக்கிறோம்.

சமீபத்திய ஆய்வில், தமிழகத்தின் பல்வேறிடங்களில் குஷ்புவுக்குக் காட்டப்


• கள ஆய்வில் காட்சித் துறை மாணவர்கள்...

# கருத்துக் கணிப்பு ரகசியங்கள்!

எங்கே வந்தது என்று கேட்கிறார்கள். காட்சித் தகவலியல் பாடத்தில், மீடியா ரிசர்ச் மிக மிக முக்கியமான அங்கம். மீடியா ரிசர்ச் என்பது மக்களைப் பற்றிய ஆய்வு. இதற்கு மக்களிடம் போகாமல், வகுப்பறையில் இருந்தபடியே அதிகம்

பட்ட எதிர்ப்பு நியாயமானதா என்று கேட்டபோது 67.4 சதவிகிதம் பேர் மிகவும் நியாயமானது என்று கருத்துச் சொல்லியிருக்கிறார்கள். வணிக நோக்கில் ஊடகங்கள் ஊதிப் பெரிதாக்கிவிட்டன என்று சொன்னவர்கள் 9.8 சதவிகிதம் பேர்”

என்றார்.

"மக்களைப் பற்றி நாங்கள் நடத்துகிற ஆய்வுகள், நூலகங்களில் முடங்கிவிடாமல் மீண்டும் மக்களிடம் எடுத்துச் செல்லப்பட வேண்டும் என்பதால் ஒவ்வொரு முறையும் மீடியாவுடன் எங்கள் ஆய்வு முடிவுகளைப் பகிர்ந்து கொள்கிறோம். ஆனால் எந்தக் கட்சிக்கு மக்களின் ஆதரவு பெருகியிருக்கிறது என்பதை மட்டுமே அவர்கள் கருத்தில் எடுத்துக் கொள்கிறார்கள்" என்று ஆதங்கப்படுகிறார்.

"தேர்தலை ஒட்டிய மக்களின் கருத்து என்பது வாக்குச் சாவடிக்கு சென்று வோட்டுப்போடும் தருணத்துக்கு முன்பு வரை நிலையானது அல்ல. இது மாறிக் கொண்டே இருக்கும். அதனால்தான் கருத்தை அடிக்கடி கணிக்கிறோம். இந்த அடிப்படைத் தன்மையை முதலில் புரிந்து கொள்ள வேண்டும்."

தேர்தல் வரப்போகிறது என்று மக்களுக்குத் தெரிய ஆரம்பித்ததும் அதையொட்டி பேச ஆரம்பிப்பார்கள். இந்தப் பேச்சு வளர்ந்து வளர்ந்து ஒரு கருத்து உருவாகிறது. இந்தக் கருத்து உருவாக்கம் என்பது வாக்குப் பதிவு நாள் வரை ஒரு தொடர் நிகழ்வாகவே இருக்கும். மக்கள் எந்தத் திசையை நோக்கிச் சிந்திக்கிறார்கள் என்ற கருத்து உருவாக்கம் முழுமையாக உருப்பெற ஒரு காலகட்டம் தேவைப்படும். இதில் கருத்துக் கணிப்பு என்பதன் பங்கு என்னவென்று பார்த்தால், கருத்து உருவாகிக் கொண்டிருக்கும் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் மக்களின் சிந்தனை எப்படி இருக்கிறது என்ற திசையை (டிரெண்ட்) குத்துமதிப்பாகச் சொல்வதுதான். யாருக்கு எத்தனை சீட் என்பதும் இதே அடிப்படையில் தோராயமாகச் சொல்வதுதான்" என்கிறார்.



• ச.ராஜநாயகம்

**ச**ரி! மக்கள் மத்தியில் கருத்துருவாக்கம் நிகழ என்னவெல்லாம் காரணங்களாக இருக்கின்றன?

"யார், யார் களத்தில் நிற்கிறார்கள், எப்படிப்பட்ட வாக்குறுதிகளை முன் வைக்கிறார்கள், ஏற்கெனவே ஆட்சிமன்ற உறுப்பினராக (எம்.எல்.ஏ., எம்.பி.) இருந்தவர் என்ன செய்திருக்கிறார், என்ன செய்யத் தவறி இருக்கிறார், போட்டியிட்டுத் தோற்றவர் தோல்வியை எப்படி எடுத்துக் கொண்டிருக்கிறார், அவருக்கும் தொகுதி மக்களுக்கும் உள்ள உறவு என்ன?, புதிய வேட்பாளர் எனில், அவர் பின்னணி அவரது தோற்றம், ஆளுமை என்று கவனிக்கிறார்கள்.

இதைவிடத் தங்களை வழி நடத்துகிறவர்

களின் கருத்து என்னவென்று முக்கிய மாகப் பார்க்கிறார்கள். வழிநடத்துகிறவர் களில் முக்கியமானவர் குடும்பத் தலைவர். அடுத்து 'பியர் குரூப்' (peer group) எனப் படும் நண்பர்கள், நலம் விரும்பிகளின் வட்டம். 'அவர் என்னப்பா சொல்றார். அவர் சொன்னா சரியாத்தான் இருக்கும். அது மாதிரியே போட்டுருவோம்' என்று ஒரு முடிவுக்கு வருவார்கள். மூன்றாவதாக 'ஒபீனியன் லீடர்ஸ்'. இவர்கள் எங்கே யிருந்தும் குதிப்பதில்லை. ஒரு குறிப்பிட்ட பகுதி அல்லது ஊரில் பலரையும் தினசரி சந்திக்கிற ஒரு நபராக ஒபீனியன் லீடர் இருப்பார். அவர் அந்த ஊரைப் பொறுத் தவரை டீக்கடைக்காரராகவோ, அஞ்சல் காரராகவோ, ஆசிரியராகவோ இருக்கலாம்.



இந்தக் காரணங் களோடு, வாக்குப் பதி வுக்கு முந்தைய மூன்று தினங்களில் முடிவெடுக் கும் எந்தக் கட்சியும் சாராத நடுநிலை வாக்காளர்கள், கருத்துக் கணிப்புகளின் வலையிலிருந்து தள்ளியே இருக்கக் கூடிய வர்கள். வாக்குப் பதிவுக்கு முந்தைய தினத்தில் சத்தியம் வாங்குதல், அச்சுறுத்து தல், ஏதேனுமொரு வகையில் வாக்கினை விலை பேசுதல், கள்ளவாக்கு போன்ற ஜனநாயக மரபுகளுக்கு அப்பாற்பட்ட காரணங்களையும் கருத்துக் கணிப்பு களால் கண்டறிய முடியாது" என்றவர், கருத்துக் கணிப்பில் இறங்கும் தொழில் முறை நிறுவனங்கள், ஊடகங்கள் பின் பற்றும் வழிமுறைகளின் குறைபாடுகளை எடுத்துக் காட்டுகிறார்:

"கருத்துக் கணிப்பு நிறுவனங்கள் 'ரேண்டம் சாம்ப்ளிங்' என்ற முறையைப் பயன்படுத்துவதாகச் சொல்கிறார்கள். அதாவது நுணுக்கமாகவும் பரவலாகவும் தேர்வு செய்யப்பட்ட வாக்காளர் களிடமிருந்து கருத்துகளைச் சேகரித்தல் என்று இதைச் சொல்லலாம். ஆனால் நமது நாட்டில் இது நடைமுறை சாத்திய மில்லாத ஒன்று. நான்கு கோடி வாக் காளர்கள் இருக்கிறார்கள் என்றால், பல்வேறு சமூகக் குழுக்களாகப் பிரிந்திருக் கும் வாக்காளர்களின் ஒவ்வொரு தரப் புக்கும் சரிசமமான முக்கியத்துவம் கொடுத்து ரேண்டம் சாம்ப்ளிங் செய்யப் பட வேண்டும். ஆனால் எதை ஆதார மாக வைத்து சம முக்கியத்துவம் என்ற பிரதிநிதித்துவத்தைக் கொடுப்பது? நம் மிடம் துல்லியமான வாக்காளர் பட்டி யல் என்பது இதுவரை கனவாகவே இருந்து வருகிறது. அடுத்து மக்கள் தொகை கணக்கெடுப்பும் முழுமையான தாக இல்லை. ரேஷன் கார்டு பட்டியலும் முழுமையானது இல்லை. நிலைமை இப்படியிருக்கும்போது பலரும் ரேண்டம் சாம்ப்ளிங் என்று சொல்வது மகா அபத்தம். இங்கே செய்யப்படுவதெல்லாம் 'கன்வீனியன்ஸ் சாம்ப்ளிங்' முறைதான். அதாவது நடைமுறை வசதிக்கேற்ப

**"உண்மையைத் தேடிக் கண்டடைவது சாதாரண விஷயமல்ல!"**

போகிற இடத்தில் யாரைப் பார்க்க முடி கிறதோ அவர்களிடம் கருத்துக் கேட்பது. இதனால்தான் கருத்துக் கணிப்புகளின் முடிவுகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வித மாக முன்னுக்குப் பின் முரணாக இருக் கின்றன. மேலும் தாங்கள் யாரைச் சந் தித்து கருத்துக் கேட்டோம், அவர்களது சமூக, பொருளாதார பின்னணி என்ன என்று வாக்காளர்களின் பின்புலம் பற்றி இவர்கள் வாய் திறப்பதே இல்லை'' என்றார்.

"பத்திரிகைகள் நேரடியாக தொகுதிக்கே சென்று மாதிரி வாக்குப் பதிவு மூலம்

கருத்துக் கணிப்பு நடத்துவது இன்னும் வேடிக்கையானது'' என்கிறார் ராஜநாயகம்.

"குறிப்பிட்ட பத்திரிகை, அரசியல் அரங்கில் எந்த அணியை ஆதரித்து நிற்கிறதோ, அது எதிர்பார்க்கும் முடிவுகள் எதுவோ, அதைப் புரிந்துகொள்ளும் வாக்காளர்களே அதில் கருத்துத் தெரிவிக்கிறார்கள். மேலும் சம்பந்தப்பட்ட பத்திரிகை முதலாளியின் விருப்பத்திற்கேற்ப கருத்துக் கணிப்புகள் மக்கள்மீது திணிக்கப்படலாம். மற்றொரு பக்கம் புலனாய்வு கருத்துக் கணிப்பு (உளவுத்துறை / புலனாய்வு பத்திரிகையாளர்கள்) முழுக்க முழுக்கத் தகவல் சேகரிப்பவரின் யூகத்தால் முடிவு செய்யப்படுவது" என்கிறார்.

"கருத்துக் கணிப்பில் ஈடுபடுகிறவர்களுக்கு மிகப் பெரிய சவாலாக இருப்பது வாக்காளர்களின் உளவியல் தடை. இதைக் கடந்து சென்று அவர்களின் மனதில் இருக்கும் உண்மையைத் தேடிக் கண்டடைவது சாதாரண விஷயமல்ல'' என்று சுட்டிக் காட்டுகிறார். அது என்ன உளவியல் தடை?

"நமது மக்கள் மிகுந்த புத்திசாலிகள். உங்களைப் பார்த்தவுடனேயே உங்களுக்கு என்ன பதில் வேண்டும் என்று தெரிந்து கொள்வார்கள். 'ஓ நீங்களா... சொல்லுங்க சார்! எழுதிக்கோங்க சார்' என்று தேவையானதைச் சொல்லி அனுப்பிவிடுவார்கள். இதைவிட அவர்களின் உடல்மொழியே உண்மைகளைச் சொல்லும். 'நீங்க யாருக்கு வோட்டுப் போடுவீங்க?' என்று கேட்பவர்களிடம் 'அதுக்குத்தான் போடுவோம்ங்க' என்பது ஒரு வகை. 'ஆமா... ஆமா... அதுக்குத்தான் போடுவோம்' என்று வேறொரு தொனியில் சொன்னால் அதன் அர்த்தம் வேறு. நாங்கள் ஒரு போதும் கருத்துக் கணிப்புக்குத் தேர்வு செய்கிற மக்களிடம் கேள்வித்தாளிலிருந்து கேட்பதில்லை. கேள்விப் புத்தகம், ஒரு வழிகாட்டியாக எங்களிடமே இருக்கும். அதை அடிப்படையாக வைத்துக்கொண்டு அவர்களிடம் யதார்த்தமாக நீண்ட உரையாடலை நிகழ்த்துவோம். அப்போது அவர்களின் குமுறல்களை வெளிப்படுத்துவார்கள். எனது அனுபவத்தில் நான் உருவாக்கிய சமூக உளவியல் அணுகுமுறையைத்தான் நாங்கள் பண்பாட்டு - அரசியல் ஆய்வுக்குப் பயன்படுத்துகிறோம்'' என்றவரிடம்.

'இத்தகைய கருத்துக் கணிப்புகள் மக்களை எந்தவிதத்தில் பாதிக்கின்றன?' என்றோம்.

"பத்திரிகை, தொலைக்காட்சி எதுவாக இருந்தாலும் ஊடகங்கள் சொல்வதை மக்கள் அப்படியே நம்பிவிடுவது இல்லை. இது செய்திப் பரவலுக்கு உதவியாக இருக்கிறதே தவிர கருத்து உருவாக்கத்துக்கு அது ஒரு காரணி மட்டுமே'' என்கிறார்.



**"கருத்துக் கணிப்புக்கு சவாலாக இருப்பது உளவியல் தடை!"**

"நமக்கும், நம்மைச் சுற்றியும் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளும் உரிமை ஒவ்வொரு குடிமகனுக்கும் இருக்கிறது. நிலவரம் தங்களுக்குச் சாதகமாக இருக்கிறதா என்பதை அறிந்துகொள்ள மக்களுக்குத் தெரியாமல் ரகசிய கருத்துக் கணிப்பு நடத்தி இரட்டை வேடம் போடும் நேர்மையற்ற அரசியல்வாதிகள், மக்களின் தகவல் பெறும் உரிமையை மறுக்கும் விதமாக கருத்துக் கணிப்புகளைத் தடை செய்யச் சொல்வது கடைந்தெடுத்த மோசடி'' என்று கடுமையாகச் சாடுகிறார் பேராசிரியர் ராஜநாயகம்.

**- ஆர்.சி.ஜெயந்தன்**

பரத சக்கரவர்த்தி அகர்மா என்கிற உயர்ந்த தர்மத்திலே இருந்தார் என்று பார்த்தோம். இருந்தாலும் மான் குட்டியைக் காப்பாற்றினார். ஆனால் அதன் பிறகு அவர் பண்ணியதுதான் தப்பாகி விட்டது. அந்த மான் குட்டியைக் கொண்டு வந்து ஆசிரமத்திலே வைத்துக் கொண்டார். அது சிறிது நேரம் கண்ணில் தென்படாமல் போனாலும் துடிதுடித்துப் போய்விடுவார். அது அழகாகப் புல்லெல்லாம் மேயும். அத்தனை புல்லும் மொட்டை மொட்டையாக நிற்கும்.

இந்தப் புல்லைப் பற்றிச் சொல்லும்படி என்னைக் கேட்டால் 'மொட்டை மொட்டையாய்' நிற்கிறது என்றுதான் சொல்லுவேன். ஆனால், பராசர மஹரிஷி இந்தக் கதையிலே, இந்த இடத்தை வர்ணிக்கிறபோது என்ன சொல்கிறார்... அவர் வாக்கு எவ்வளவு அம்ருதமான வாக்கு பாருங்கள். ஒன்றைச் சொல்லும்போதே இன்னொன்றை நினைக்கும்படியாகச் செய்பவர்கள்தான் மகான்கள்.

என்ன சொல்கிறார்... மான்குட்டி மேய்ந்திருக்கிறது. புல் மொட்டை மொட்டையாக இருக்கிறது என்பது வாஸ்தவம்தான். அது எப்படி இருக்கிறது என்றால், ஸாம வேதத்தை அத்யயனம் பண்ணக் கூடிய பிரும்மசாரி உபநயன காலத்திலே எப்படி இருப்பானோ, அப்படி இருக்கிறது என்கிறார்!

ஏனென்றால் ஸாம வேதிகள் தலையை மொட்டை அடித்துக்கொள்ள வேண்டும். அதனால் இவர் புல்லைப் பார்த்தால் ஸாம வேத பிரும்மசாரி மாதிரி இருக்கிறதே என்கிறார்.

ஆகையினாலே, இந்த சாஸ்திரார்த்தத்தையும் - மஹரிஷி காட்டிய அழகையும் - நாம் பார்க்க வேண்டும்.

இப்படி ஆசிரமத்துக்கருகே புல் மேய்கிற அந்த மானையே நினைத்து நினைத்து ஏங்கி, அந்த பரத சக்கரவர்த்தி மானாகவே பிறந்தார். அதன் பிறகு நல்ல ஞானம் ஏற்பட்டு மறுபடியும் பிரும்ம குலத்திலே வந்து பிறந்தார். ஜட பரதர் என்று பெயர் அவருக்கு.

ஜடமாக ஓரிடத்திலே உட்கார்ந்திருப்பார் இந்த ஜட பரதர். ஒரு பாறாங்கல்லில், அப்படியே அசையாமல் அமர்ந்திருப்பார். யாரிடமும் எதையும் யாசிக்க மாட்டார். யாராவது எதையாவது கொடுத்தால் சாப்பிடுவார். ஆனால் சாப்பிடாததனாலே அவருக்கு இளைப்போ களைப்போ கிடையாது. கல்லிலே உட்கார்ந்திருக்கிறார் இப்படி.

அப்போது ஒரு சமயம், ரகுகணன் என்கிற சக்கரவர்த்தி, கபில மஹரிஷியினிடத்திலே உயர்ந்த விஷயங்களைக் கேட்க வேண்டும் என்பதற்காக வந்துகொண்டிருக்கிறான். அவனுடைய பல்லக்கைச் சுமக்கக் கூடியவர்களுக்குக் களைப்பு ஏற்பட்டு, அவர்களால் சுமக்க முடியாமல் போயிற்று. ராஜாவைப் பார்த்து, "எங்களால் முடியவில்லை; இன்னும் யாராவது ஆள் இருந்தால் சேர்த்துக்கொள்ளலாமே" என்றார்கள்.

உடனே ராஜா, "பக்கத்தில் கிராமத்தில் யாராவது ஆள் கிடைக்கிறார்களா என்று பார்த்துக்கொண்டு வாரும்" என்று அனுப்பி வைத்தார் ஆட்களை.

# குறையொன்றுமில்லை

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



## எட்டாம் பாகம் 13

இரண்டு பேர் கிளம்பிக் கிராமத்தை நோக்கிப் போனார்கள். ஊர்க் கோடியிலே பார்த்தால், இவர் -ஜடபரதர்- நன்றாக உட்கார்ந்திருக்கிறார்! பத்துப் பேரை அழைத்துக்கொண்டு போகலாம் என்று முடிவுக்கு வந்து அவரைக் கூப்பிட்டார்கள். உடனே ஜடபரதரும் அவர்கள்கூடவே புறப்பட்டுப் போனார்.

போனால், ராஜாவின் பல்லக்கு அங்கே அழகாக காத்திருக்கிறது. முன்னாலும் பின்னாலும் தண்டு - தூக்குவதற்கான கழி. பின்னால் பத்துப் பேர் பல்லக்கைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டார்கள். முன்னே இருந்த தண்டைத் தூக்கி இவர் ஒருத்தர் தோளிலே வைத்துவிட்டார்கள்.

பல்லக்கு போகிறது! சாஸ்திர ரீதியாக, வீதியிலே நடப்பவர்கள் எப்படி நடக்க வேண்டும்? ஒரு நுகத்தடியைக் கீழே போட்டால் எவ்வளவு தூரம் இருக்குமோ, அத்தனை தூரம் பார்த்து நட

என்கிறது சாஸ்திரம். ரொம்ப தூர பார்வையும் வேண்டாம். ரொம்ப நெருக்கமாகவும் பார்க்கக்கூடாது. சரியான அளவு தூரம் கண்காணித்தபடி நடக்க வேண்டும்.

ஏனென்றால், கிருதி - கீடாதி - (புழு பூச்சிகள்) கீழே போயிற்றென்றால், அவை போவதற்கு வழி விட வேண்டும். அவை நின்றால் நாம் தாண்டிப் போக வேண்டும்.

அதனால்தான் சன்னியாசிகள் நான்கு மாதம் சாதுர்மாஸ்ய சங்கல்பம் எடுத்துக் கொள்கிறார்கள். வருஷ ருதுவிலே நான்கு மாதம் அவர்கள் வெளியிலே எங்கேயும் சஞ்சாரம் பண்ணக்கூடாது. நம்மைக் காட்டிலும் அவர்களுக்கு அஹிம்ஸா தர்மம் இன்னும் அதிகம். அவர்கள் சஞ்சாரம் பண்ணுகிற போது அவர்கள் கால்பட்டு ஜீவராசிகள் மாண்டு போய் விடக் கூடாது.

நாம் நடக்கிறபோது எத்தனையோ மாண்டு போகின்றன. நாம் படுத்துக் கொண்டு உடம்பைப் புரட்டுகிறபோது எத்தனை சின்னச் சின்ன கிருமிகள் மாண்டு விடுகின்றன. அறியாமல் நிகழக்கூடிய பாவங்கள்! இதெல்லாம் நீங்குவதற்காகத்தான் வைச்வதேவம் என்கிற கர்மாவை நித்யம் நாம் பண்ண வேண்டும் - தடுக்க முடியாமல், நடக்கக்கூடிய பாவங்கள் இவை. இவற்றுக்கான பிராயச்சித்தம் வைச்வதேவம்.

ஆகையினாலே, கீழே பார்த்து நடக்க வேண்டும்; ஏதாவது புழு - பூச்சி நின்றால் தாண்டிப் போக வேண்டும் என்கிற தர்மத்தை எல்லோரும் அனுஷ்டிக்க வேண்டும்.

ஜடபரதர் இதை நன்றாக அனுஷ்டிக்கிறார். கீழே பார்த்தார்... ஏதோ இருக்கிறது; நகரவேயில்லை. ஓர் எகிறு எகிறி அதைத் தாண்டினார்.

தோளில் பல்லக்கை வைத்துக் கொண்டிருக்கிறார். அவர் ஓர் எகிறு எகிறியவுடனேயே உள்ளே உட்கார்ந்திருக்கிறானே ராஜா... அவன் நெற்றியிலே சரியான அடி! அடிபட்டவுடனே கண்ணிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வருகிறது அவனுக்கு!

"ஏன் இந்த விஷம கதியாகப் போகிறது பல்லக்கு? ஊரிலிருந்து வருகிறபோது நன்றாகத் தூக்கி வந்தீர்களே? இங்கே ஏன் கதி சரியில்லை?" என்று கேட்கிறான் ராஜா.

அதற்கு, பின்னாலிருந்த அத்தனை பேரும் சேர்ந்து பதில் சொல்கிறார்கள்: "முன்னால் இருக்கிற குண்டுதான் அப்படிப் பண்ணுகிறது. நாங்கள் எதுவும் பண்ணவில்லை."

ராஜா ஜடபரதரை ஏற இறங்க பார்த்தான். 'இப்போதுதானே வேலைக்குச் சேர்த்துக்கொண்டோம். உடனே நாம் கடிந்து கொள்ளக்கூடாது. கொஞ்சம் நாழி பார்ப்போம்!' என்று முடிவு செய்து, "சரியாகத் தூக்கிக்கொண்டு போங்கள்" என்று மட்டும் ஒருமுறை சொல்லிவிட்டு, பல்லக்கு கதவைச் சாத்திக்கொண்டு உட்கார்ந்தான்.

இவர் - ஜடபரதர் - அதையெல்

## வாரியார் அமுதம்

**இப்போது செய்கின்ற விவசாயத்தின் பயனை அடுத்த ஆண்டில் நீ அனுபவிப்பாய். நன்கு உழைத்துப் பாடுபடுவாயானால் நல்ல பயன் விளையும். அடுத்த ஆண்டு உனக்கு மேலாக இருக்கும்.**

சோம்லாம் லட்சியமே பண்ணவில்லை. மறுபடியும் ஓர் எகிறு எகிறினார். இந்த முறை கன்னத்தில் சரியான அடி ராஜாவுக்கு! வலியை அவனால் தாங்கவே முடியவில்லை. பல்லக்கு கதவைத் திறந்து ஜடபரதரை ஒரு குத்து குத்தி, "ஏ குண்டனே! நல்ல பலிஷ்டனாக இருக்கிறாய்... ஊரிலேயிருந்து தூக்கிக்கொண்டு வருகிறவர்களுக்கு இல்லாத களைப்பு உனக்கு இப்போது ஏற்பட்டுப் போச்சா?" என்று கேட்டான்!

பிறந்தது முதலே பேசாத அவர், ராஜா இந்த மாதிரி ஒரு கேள்வி கேட்டவுடனே பேச ஆரம்பித்தார்.

அவர் அன்று பேசவில்லையென்றால் நமக்குத் தத்துவம் தெரிந்திருக்கப் போவதில்லை. அவர் பேசிய முகூர்த்தம் இருக்கிறதே, அது

ரொம்ப உயர்ந்தது.

''யாரைப் பார்த்து குண்டு என்கிறாய்? நான் குண்டு அல்ல; யார் பல்லக்கைத் தூக்குகிறார்...? நான் பல்லக்கைத் தூக்கவில்லை. பல்லக்கைத் தூக்குவதனால் உண்டான சிரமம் யாருக்கு என்று நினைக்கிறாய்...'' என்று ஜடபரதர் ராஜாவை நோக்கிச் சொன்னார்.

ராஜா பார்த்தார்... இதென்ன பைத்தியமாக இருக்கும் போலிருக்கிறதே! பிரத்யக்ஷமாக குண்டு என்று தெரிகிறபோது, ''குண்டு இல்லை'' என்று மாற்றிச் சொன்னால் யாராவது ஒப்புக்கொள்வார்களா? கண்ணுக்கு நேராகத் தெரிகிறபோது மாற்றிச் சொன்னால் நன்றாக இருக்குமா?

உண்டான சிரமம் எனது என்கிறாய். நன்றாகக் கவனி, எனது பாதமானது பூமியிலே நன்றாக ஊன்றப்பட்டிருக்கிறது. கணுக்கால் இருக்கிறது. அதற்கு மேல் முழங்கால் இருக்கிறது. அதற்கு மேல் தொடை இருக்கிறது. அதற்கு மேல் இடுப்பு இருக்கிறது. அதற்கு மேல் உடம்பு; அதற்கு மேல் தோள்; அதற்கு மேல் பல்லக்கு வைக்கப்பட்டிருக்கிறது.

இப்போது இந்தப் பல்லக்கை இந்தப் பாதம் தூக்குகிறதா? கணுக்கால் தூக்குகிறதா, முழங்கால் தூக்குகிறதா? தொடை தூக்குகிறதா? தோள் தூக்குகிறதா? எது தூக்குகிறது?'' என்றார்.

ராஜாவுக்குத் தலை சுற்றியது! அடுத்து இன்னொரு கேள்வி கேட்டார் ஜடபரதர்:

''விருக்ஷம் - மரம் இருக்கிறது. அது நன்கு சாங்கோபாங்கமாக வளர்ந்திருக்கிறது;

**பலாக இருந்து பாடுபடாமல் பொழுது போக்குவாயானால் அடுத்த ஆண்டில் உனக்கு நன்மையிராது. அதுபோல் இந்தப் பிறப்பில் நீ செய்யும் நன்மைகளை மறுபிறப்பில் அனுபவிப்பாய். நன்மை செய்யாது சோம்பியிருந்து தீங்கு புரிவாயானால் மறுபிறப்பில் உனது வாழ்வு சிறப்படையாது; தாழ்வு அடையும்.**



திரும்பவும் ''நான் குண்டு அல்ல'' என்பதை அழுத்திச் சொல்கிறார் அவர். 'நான்' என்பது ஆத்மா. ஆத்மாவில் ஒல்லியான ஆத்மா, குண்டான ஆத்மா, பருமனான ஆத்மா என்றெல்லாம் உண்டோ? ஆத்மாவெல்லாம் ஒரே மாதிரி அணுவானது. ஆகையினால் என் சரீரம் குண்டு என்று சொல், ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ஆத்மாவைக் காட்டிலும் வேறான சரீரத்தை 'நான்' என்று சொல்கிறாயே அது எப்படிப் பொருந்தும்?'' என்றும் கேட்கிறார் ஜடபரதர்.

அதற்கும் மேலே அவர் சொல்கிறார்:

''நீ பல்லக்கிலே வருகிறாய். இந்த பூமியிலே பல்லக்கைத் தூக்குவதனால்

உயர்ந்திருக்கிறது. விசேஷமான மரம் என்று எல்லோரும் கொண்டாடுகிறார்கள்! இந்த மரத்தை வெட்டிக் கீழே போட்டால் அதற்கு மரம் என்ற பெயர் போய்விடுகிறது. கட்டை என்று அதைச் சொல்கிறார்கள். அதையே ரம்பத்தால் அறுத்துப் போட்டால் பலகை. அதற்கு வர்ணமெல்லாம் பூசி, பட்டுப் பீதாம்பரங்களெல்லாம் போர்த்தி அலங்கரித்தால் பல்லக்கு - ஆந்தோளிகா - சிவிகா என்று பெயர். எல்லோரும் உன்னை என்ன சொல்கிறார்கள்...? 'ராஜா பல்லக்கிலே பவனி வருகிறான்' என்றுதானே சொல்கிறார்கள்...? 'ராஜா கட்டையிலே போகிறான்' என்று சொல்கிறவர்கள் உண்டோ?'' என்றார்!

*(வளரும்)*

தமிழில் 'ஏ' சர்டிபிகேட் பெற்ற முதல் படம் மர்மயோகி. இப்படத்தில் வரும் பேய் போன்ற பயங்கரக் காட்சிகளுக்காக இந்த சர்டிபிகேட் தரப்பட்டது. கதை, வசனம் கலைஞர் மு. கருணாநிதி. கதாநாயகர் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். வெளிவந்த ஆண்டு 1951.
- 'சினிமா செய்திகள்'



# 13 இரவைக் கிழித்த குரல்!

கு. ஞானசம்பந்தன்

சினிமாவுக்குப் போகலாம் வாங்க!

"மணி, மணி... நீ அந்த அதிசயத்தைப் பார்க்காமல் போனாயே, என்ன ஆச்சரியம். மலைப்பாம்பு உடம்பு, பெண் தலை, அதிலும் அந்தப் பெண் பேசுகிறது. பெயர் சித்ராவாம். ஊர் கோலாலம்பூராம்"

நானும் சிவனாண்டியும் மாறி மாறிச் சொல்ல, மணி சிரித்தான்.

"டேய் இதெல்லாம் உண்மையில்லடா, 'மணாளனே மங்கையின் பாக்கியம்' படத்திலே இதே மாதிரி ஒரு காட்சி வரும் தெரியுமா? நம்ம ஜெமினிகணேசன் ஒரு குகைக்குள்ளே போறப்போ இது மாதிரி ஒரு முனிவர் தலையும், பாம்பு உடலுமா காட்சி தருவார் தெரியுமா?"

"அது சினிமாடா... வெறும் செட்டப்" என்றான் சிவனாண்டி.

"பின்னே இது என்னன்னு நினைச்சீங்க... இதுவும் செட்டப்தான். அந்தப் பெண் இருக்கே 'சித்ராவா' அத நான் நேத்து அரிசிக் கடையில பாத்தேன் தெரியுமா? பாவம்டா ஏதோ வயித்துப் பிழைப்புக்கு இது ஒரு தொழில். சரி வாங்க, நாடகம் பார்க்கப் போகலாம்" என்று அழைத்தான்.

எங்களுக்குக் குழப்பம் தீரவில்லை. பாம்புப் பெண் அரிசி சாப்பிடுமா?

திறந்தவெளி நாடகக் கொட்டகை



யின் முன்புற மணல் திட்டில் ஆயிரக் கணக்கான மக்கள் பாய், படுக்கை இவற்றோடு உணவுப் பொருட்களை யும் வைத்துச் சாப்பிட்டபடி நாடகம் பார்க்கத் தொடங்கினார்கள்.

நாடகம் தொடங்கி பபூன் வந்து எல்லாப் பாடல்களையும் துரித கதி யில் பாடிக் கொண்டிருந்தார். பின் பாட்டு ஆர்மோனியம் பிச்சையப்பா உச்சஸ்தாயியில் கிளப்பிக் கொண் டிருந்தார்.

"எங்கே முருகன் வரக் காணோம்?" என்று நான் கேட்டேன். "அவர் இப் போது வரமாட்டார்டா. பன்னிரண்டு மணிக்கு மேலேதான் தோன்றுவார்" என்று மணி சொல்லிவிட்டு உயரமான மணல்மேட்டில் எங்களோடு அமர்ந்து கொண்டான்.

பபூன் கூத்து முடிந்து, வள்ளியாக கானக்குயில் யு.ஆர்.ஜீவரத்தினம் தோன்றிப் பல பாடல்கள் பாட, நாரதர் வந்து அவர் பங்குக்கு ஆறு பாட்டுப் பாட, 'ஒருவேளை முருகன் இன்றைக்கு லீவோ?' என்று எண்ணி நான் தூக்கக் கலக்கத்தில் மயங்க,

"சம்போ மகாதேவா... சாம்ப சதா சிவ..." என்று ஒரு குரல் இரவின் அமைதியைக் கிழித்துக்கொண்டு கிளம்பியது.

நாடகத் திரையின் பின்பக்க மிருந்து இந்தத் தேவகானம் கேட்கத் தொடங்கியதும், வாண வேடிக்கைகள் தொடங்கின. அதிர்வேட்டுகளால் வைகை ஆறே கலங்கியது.

அத்தனை மக்களும் அலறி அடித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்து நாடகத் திரையைப் பார்க்கத் தொடங்கினார்.

நாடகத் திரை மேலே செல்ல, ஒரே புகைமயம். புகைக்கு நடுவே ஒளி வெள்ளத்தில் முருகப் பெருமான் வேலோடு காட்சி தந்தார். மீண்டும் பாடத் தொடங்கிய இசையரசர் டி.ஆர்.மகா லிங்கத்தின் குரல், அமுத வெள்ளமாய்ப் பரவத் தொடங்கியது.

"சம்போ... மகாதேவா" பாட்டுக்கு அடுக்கடுக்காக ஸ்வரம் போட்டபடி அவர் பாடி முடித்ததும், ஊர் மரியாதை தொடங்கியது. ஊர்ப் பெரியவர்கள் முருகப் பெருமானுக்கு (டி.ஆர்.மகாலிங் கத்துக்குத்தான்) பொன்னாடைகள், மாலை மரியாதைகள் செய்யத் தொடங் கினார்கள்.

நான் மனதுக்குள் தீர்மானித்துக் கொண்டேன். அதிகப் பணம் சேர்த்தால் பணக்காரன் ஆகலாம். புகழுக்குரிய செயல்களைச் செய்தால் பணமும் கிடைக்கும்; மக்கள் மனத்திலும் நிற்கலாம். அதற்குக் கலை உலகம்தான் சரியான இடம். மறைந்துபோன காதல் மன்னன் ஜெமினிகணேசன் அவர்கள் பிற்காலத் தில் ஒரு பேட்டியில் 'என்னை என் தந்தை சட்டம் படிக்க வைத்து வக்கீலாக்க வேண்டும் என நினைத்தார். அப்படிப் போயிருந்தால் வெறும் வக்கீலாக மட்டும் இருந்திருப்பேன். ஆனால் சினிமா உலகில் வக்கீலாக, டாக்டராக, இன்ஸ்பெக்டராக, நீதிபதியாக பலப்பல பதவிகள் பெற்

றேன்' என வேடிக்கையாகக் கூறியிருந்தார்.

நள்ளிரவில் தொடங்கிய டி.ஆர்.மகாலிங்கம் அவர்களின் 'வள்ளி திருமணம்' நாடகம், விடியற்காலை ஐந்து மணிக்குத்தான் ஒருவழியாக முடிவடைந்தது. விடிய விடிய விழித்திருந்ததால் சிவந்த கண்களும் வீங்கிய முகமுமாக வீட்டுக்குக் கிளம்பிய நாங்கள், நடுவழியில் வள்ளி திருமண நாரதரைப் பார்த்தோம். மேடையில் பார்த்ததற்கும் நேரே பார்ப்பதற்கும் ஒரு ஜென்ம வேறுபாடு தெரிந்தது.

''அண்ணே, வள்ளியோடு தர்க்கம் பண்ணும்போது பிரமாதப்படுத்திட்டீங்க. என்ன உச்சரிப்பு, எத்தனை ராக ஆலாபனை. இந்த டீயைச் சாப்பிடுங்கண்ணே'' என்று உரிமையோடு நாரதருக்கு டீயைக் கொடுத்தபடிதான் பாராட்டைச் சொன்னான் சினிமாமணி.

நாரதர், சிவபெருமானையே நேரில் பார்த்தது போல் மகிழ்ந்து, ''இதென்ன தம்பி பெரிய விஷயம். நான் கிட்டப்பா சுந்தராம்பாள் வள்ளி திருமணத்தில் நடிச்சவன். அந்தம்மா கே.பி.சுந்தராம்பாளோட போட்டிபோட்டு வசனம் பேசிப் பாடி இருக்கேன்'' என்று பெருமிதமாகச் சொன்னார்.

அதற்குள் காமெடி வேடம் போட்ட பபூன் நடிகரும் அதே கடைக்கு வரவும் மக்கள் கூட்டம் அவரையும் சூழ்ந்து கொண்டது.

மணி அவரையும் விடவில்லை. அவருக்கும் 'டீ' வாங்கிக் கொடுத்து மரியாதை செய்தான்.

''அவ்வளவு கூட்டத்திலேயும் எப்படிண்ணே பயப்படாம பேசுறீங்க, பாடுறீங்க?'' என்று ஒரு மூத்த ரசிக சிகாமணி கேட்டார். அதற்கு அந்த காமெடி நடிகர் தொண்டையைச் செருமிக்கொண்டு சொல்லத் தொடங்கினார். ''ஐயா, நல்லாக் கேட்டீங்க, இதே கேள்விய நான் சின்னப்புள்ளையா இருந்தப்ப நம்ப கலைவாணர் அண்ணன்கிட்ட கேட்டேன். அவரு அதுக்கு நல்லா விளக்கங் குடுத்து ஒரு கதையும் சொன்னாரு....'' என்று சொல்லி நிறுத்த, கூட்டம் ஆவலோடு அவரைப் பார்க்கத் தொடங்கியது.

(தொடரும்)

திரும்பிய பக்கமெல்லாம் 'நமது வெற்றி வேட்பாளர்' என்கிற சுவர் விளம்பரங்கள்தான் திருமாவளவனுக்கு. காட்டுமன்னார்கோயில் தொகுதி முழுக்கவும் இப்படித்தான். திருமாதான் வேட்பாளர் என்று இன்னும் முடிவாகாத (கட்டுரை எழுதப்படும் தினம் வரை அறிவிக்கப்படவில்லை) நிலையிலும் விடுதலைச் சிறுத்தைகளின் கை ஓங்கியே இருக்கிறது. எதிரணி வேட்பாளராகக் களமிறங்குகிறார் காங்கிரஸின் சிட்டிங் எம்.எல்.ஏ வள்ளல்பெருமான். இங்கு மொத்த வாக்காளர்கள் ஒரு லட்சத்து ஐம்பத்தோராயிரம் பேர். கணிசமான அளவில் தலித் மக்கள் வசிக்கின்றனர்.

2001 சட்டமன்ற தேர்தலில் அ.தி.மு.க, பா.ம.க கூட்டணியின் காங்கிரஸ் வேட்பாளர் சச்சிதானந்தத்தைக்

யாகிறது. அதனாலேயே எப்போது
இல்லாத அளவுக்கு இந்தமுறை, எண்
பது சதவிகிதத்துக்கும் மேலாக வாக்
குகள் பதிவாகலாம் என எதிர்பார்க்கப்
படுகிறது. தொகுதிக்குள் அ.தி.மு.
வாக்கு வங்கி படுபலவீனம். இருந்
போதிலும் தலித்துகளின் வாக்குகளை
மட்டும் நம்பியே இங்கு போட்டியிடு
கிறார் திருமாவளவன். தொகுதிக்குள்
தி.மு.க., பா.ம.க., காங்கிரஸ் மற்றும்
கம்யூ. வாக்குகள், இவற்றுடன் வள்ளல்
பெருமானுக்கென இருக்கும் ஆதரவு
வோட்டுகள் ஒன்று சேரும்போது
தி.மு.க கூட்டணியின் காங்கிரஸ் வேட்
பாளரே இங்கு வெற்றி பெறுவது
உறுதி!'' என்று நம்மிடம் அடித்துச்
சொன்னார் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்
கட்சியின் கடலூர் மாவட்ட கமிட்டி
உறுப்பினர் பி.எஸ். மகாலிங்கம்.



• பி.எஸ். மகாலிங்கம்



• த. வீரமணி



• இரா. கனகசபை



• ரா. இளையராஜா

காட்டிலும் சுமார் பதினேழாயிரம் வாக்குகள் அதிகம் பெற்று வெற்றியடைந்திருக்கிறார் காங்.ஜனநாயகப் பேரவை வேட்பாளர் வள்ளல்பெருமான்.

"தொகுதி அளவில் நன்கு பிரபலமானவர் வள்ளல்பெருமான். தமிழக அளவில் பிரபலமாயிருப்பவர் திருமாவளவன். எனவே, இந்த இருவரும் ஒருவரையொருவர் எதிர்த்து நிற்கும்போது போட்டி மிகவும் கடுமை

''ராஜன் வாய்க்காலில் 'நாட்சி
எனப்படும் குறுகிய அணை ஒன்று கட்
டித் தரப்பட வேண்டுமென்பது விவ
சாயிகளின் ஐம்பது வருடக் கோரிக்கை
எம்.எல்.ஏ முயற்சியில் 2004-05ல் அது
கட்டித் தரப்பட்டுள்ளது. அதனால்
அதன் சுற்று வட்டாரக் கிராம விவ
சாயிகள் பயன் அடைந்து வருகிறார்
கள். இப்படி தொகுதிக்கு பல நல்ல
காரியங்கள் செய்திருக்கிறார் வள்ளல்
பெருமான். மக்கள் வோட்டு அவருக்

# காட்டுமன்னார்கோயில்

நத்தான்'' என்றார் காங்கிரஸ் பிரமுகர் இரா.கனகசபை. ஆழங்காத்தான் ஊராட்சி மன்றத் தலைவர் ப. செந்தில் குமாரும் (தி.மு.க) இதே கருத்தை நம்மிடம் முன்மொழிந்தார்.

அரசு மருத்துவமனைக்குக் கூடுதல் கட்டடம், மேல வன்னியூர், வல்லம் படுகை, ரெட்டியூர், கடுப்பேரி ஆகிய ஊர்களில்



* திருமாவளவன்

# திருமா... திரும்பம் வருமா?



* வள்ளல்பெருமான்

அரசினர் மாணவர் நல விடுதிகள், நகராட்சி வழியாக காட்டுமன்னார் கோயில் - சிதம்பரம் சாலை, இருபத்தைந்து கி.மீ நீளத்துக்கு எட்டரைக் கோடி ரூபாய் நிதியில் செயல்படப் போவது என வள்ளல்பெருமானின் தொகுதி நலத்திட்டங்கள் தொடர்கின்றன. இருந்தபோதிலும், கொள்ளிடம் ஆற்றுப்படுகைத் தோட்டங்களில் பூத்துக் குலுங்கும் வாசனை மலர்களின் விளைச்சலைக் கருத்தில்கொண்டு, காட்டுமன்னார் கோயில் பகுதியில் ஒரு வாசனைத் தொழிற்சாலை கொண்டு வரப்பட வேண்டுமென்கிற மனக்குறை இப்பகுதி வாக்காளர்களிடையே இருந்து வருகிறது.

''எங்க காலனியில ஒண்ணு சேர்ந்து



• தமிழ்வாணன்



• ராம்குமார்

யாருக்கு வோட்டுப் போடணும்னு முடிவு பண்ணிச் சொல்றாங்களோ, அவுங்களுக்குத்தான் நாங்க வோட்டுப் போடுவோம். போனதடவை அம்பு சின்னத்துக்குப் போட்டோம். இந்தத் தடவையும் திருமா தம்பிக்குத்தான் வோட்டுப் போடுவோம்!'' என்றார் வீரசோழபுரம் தலித் பெண்மணி ராசாத்தி.

''சென்ற எம்.பி தேர்தலில் இங்கு திருமாவளவன் பெற்ற வாக்குகள் பா.ம.க போட்டியிட்டதால் தலித்துகளா, வன்னியர்களா எனப் பிரிந்து விழுந்த வோட்டுகள் ஆகும். தொகுதியில் பல நல்ல காரியங்களைச் செய்து தந்துள்ளார் வள்ளல் பெருமான். அதனால் முன்பு திருமாவளவன் பெற்ற தலித் வாக்குகளில், முப்பது சதவிகிதத்துக்கும் மேலாக வள்ளல் பெருமான் தனக்கு ஆதரவாகப் பெற்று இந்த முறையும் வெற்றி பெற்றுவிடுவார்!'' என்றார் குளக்குடி கிராம விவசாயி ராம்குமார்.

கோவில்பத்து கிராமம் அம்பேத்கார் தெருவில் வசித்து வரும் கட்டடத் தொழிலாளி மகேஸ்வரி, ''எங்க சாதிசனங்க நல்லா இருக்கணும்ங்கறதுக்காகவே அந்த திருமா தம்பி... இன்னும் கண்ணாலம் கூடக் கட்டிக்கவே இல்லீங்களாம். பொதுவா எங்க ஜனங்க வோட்டு எல்லாமே அந்தத் தம்பிக்குத்தாங்க!'' என்று உறுதியாகச் சொன்னார்.



• ராசாத்தி

'இது என்ன புது கலாட்டா' என்கிற கதையாக, திருமாவளவனை எதிர்த்து பறையர் பேரவை சார்பில் ஒருவர் இங்கு போட்டியிடப்போவதாகக் கூறப்படுகிறது.



• செந்தில்குமார்

''விடுதலைச் சிறுத்தைகள் போட்டியிடும் ஒன்பது தொகுதிகளிலும் எங்கள் பறையர் பேரவை சார்பாக வேட்பாளர்கள் களமிறக்கப்பட உள்ளார்கள். காட்டுமன்னார்கோயில் தொகுதியில் பறையர் பேரவை வேட்பாளர் குறைந்தது பத்தாயிரம் வாக்குகளுக்கும் மேலாகப் பெற்று விடுவார். இது திருமாவளவனின் வெற்றியை நேரடியாகப் பாதிக்கும் என்பது மட்டும் உறுதி!'' எனச் சொல்கிறார் கடலூர் மாவட்ட பறையர் பேரவை பிரமுகர் ஞா. இளையராஜா.

''தலித் மக்கள் மத்தியில் வள்ளல் பெருமானைவிட, திருமாவளவனுக்கே ஆதரவு அதிகம். அத்துடன் விடுதலைச் சிறுத்தைகளின் வாக்குகளும், அ.தி.மு.க வாக்குகளும் சேர்ந்து அவர் 2004-ல் பெற்றிருந்ததைக் காட்டிலும் அதிக வோட்டு வித்தியாசத்தில் வெற்றிபெற வைத்துவிடும்!'' என்று நம்பிக்கை தெரிவிக்கிறார் அழிஞ்சிமங்கலம் கிராம அ.தி.மு.க இளைக் கழகச் செயலாளர் த.வீரமணி.

விடுதலைச் சிறுத்தைகள் அமைப்பின் காட்டுமன்னார் கோயில் ஒன்றிய அமைப்பாளர் மெய். சீனிவாசன் என்கிற தமிழ்வாணன், ''கடந்த சட்டமன்ற தேர்தலில் இங்கு வள்ளல்பெருமான் வெற்றி பெற்றதே, விடுதலைச் சிறுத்தைகளின் வாக்குகளை வைத்துத்தான். தொகுதியில் இருக்கும் பதினைந்தாயிரம் முஸ்லிம் வாக்காளர்கள், வெற்றியை நிச்சயிக்கும் இடத்தில் இருக்கின்றனர். அவர்களின் பெரும்பான்மை ஆதரவு எங்களுக்கு இருக்கிறது. இவற்றுடன் மற்ற சமூகத்தினரின் வாக்குகளையும் பெற்று திருமாவளவன் வெற்றி பெறுவது உறுதி!'' என்றார்.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்போது தி.மு.க, பா.ம.க, காங்கிரஸ், கம்யூனிஸ்ட் வாக்குகள் மற்றும் தொகுதிக்குள் இருபது வருட அறிமுகம் ஆகியன வள்ளல்பெருமானுக்கு ப்ளஸ் பாயிண்ட்டுகள். ஆனால் அவரை எதிர்த்து திருமாவளவனே இங்கு களமிறங்கியிருப்பதால் போட்டி கடுமையானதாக மாறியிருக்கிறது.

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# சின்ன ஜோக்; பெரிய பரிசு!

## போட்டி முடிவு – 11

ஹோட்டல் ஜோக்ஸ் எழுதி கலக்கிப்புட்டீங்க கலக்கி. பெஸ்ட் ஜோக் எழுதி செளம்யா மேட்ரிமோனியல் சென்டர், சென்னை வழங்கும் பிரஷர் குக்கர் பரிசாகப் பெறும் வாசகர், லட்சுமி ஆவுடைநாயகம்.

**"என்னப்பா இது, சோத்துல ஒரு கல் இருக்கு..?"**

**"சார்... அவசரப்பட்டு எதையும் முடிவெடுக்காதீங்க. சாப்பிட்டு முடிஞ்சதும் மொத்தமா சொல்லுங்க..."**

●●●

பிரசுரத்துக்குத் தேர்வானவை...

"என்னப்பா சர்வர், இது என்ன மெனு கார்டா?"

"இல்லை சார். காசு இல்லாட்டி இதில் உள்ள ஏதாவது ஒரு வேலையை நீங்க செலக்ட் பண்ணி, அதைச் செய்துக்கலாம் சார்!"

- எம்.அசோக்ராஜா

●●●

"ஏண்டாப்பா! உடைச்ச தேங்கா கெட்டுப் போகாம இருக்கணும்னா அதுல கொஞ்சம் உப்பைப் போட்டு வைக்கணும்!"

"அது சரி மாமி. அதை எங்கிட்டே ஏன் சொல்றீங்க?"

"ஏதோ ஹோட்டல்ல சாப்பிட்டு முடிச்சதும் சர்வருக்கு 'டிப்ஸ்' கொடுக்கணும்னு சொன்னாங்க. அதான் 'டிப்ஸ்' கொடுத்தேன்.

- ஆ.நல்லமுத்து

●●●

"என்ன சார் இது. இந்த ஹோட்டல்ல சர்வர் நம்மளைத் திட்டிக்கிட்டே பரிமாறுறாரே?"

"நான்தான் சொன்னேனே.. இந்த ஹோட்டல்ல சாப்பிட்டால், பொண்டாட்டி கையால சாப்பிடற மாதிரி இருக்கும்னு...!"

- குட்டி பிரசன்னா

# பொண்டாட்டி கையால சாப்பாடு!

"மேஜை துடைக்கற பையனை கல்லாவில உட்கார வச்சது தப்பாப் போச்சு!"

"ஏன்?"

"கல்லாவையும் சுத்தமா துடைச்சுட்டு ஓடிட்டான்!"

- எஸ்.இராஜேந்திரன்

# டயாபடிக் ரெட்டினோபதிக்கு டாட்டா!



சர்க்கரை நோய் காரணமாக ஐம்பது வயதைக் கடந்த இந்தியர்களில் இருபது முதல் இருபத்தைந்து சதவிகிதம் பேர் பார்வைத்திறன் இழப்பால் பாதிக்கப்படுகிறார்கள் என கண்டறிந்து அறிவித்துள்ளது மத்திய சுகாதார மற்றும் குடும்பநல அமைச்சகம். கையோடு இதைக் கட்டுப்படுத்த 'டயாபடிக் ரெட்டினோபதி' தேசிய திட்டத்தைத் தொடங்கி, அதைத் தீவிரப்படுத்தியிருக்கிறது. டயாபடிக் ரெட்டினோபதியிலிருந்து சர்க்கரை நோயாளிகள் தங்களை எப்படி தற்காத்துக் கொள்ளலாம்? ரெட்டினோபதியின் பாதிப்புக்கு இலக்காகி இருந்தால் பாதிப்பின் அளவை எப்படிக் கண்டறிவது... பாதிப்பைப் பொறுத்து எத்தகைய சிகிச்சையை மேற்கொள்ளலாம் என்பவை குறித்து விளக்குகிறார் உமா கண் மருத்துவமனையின் தலைவரும், கண் மருத்துவ நிபுணருமான டாக்டர் அருள்மொழிவர்மன்.



• டாக்டர் அருள்மொழிவர்மன்

"விழி வெண்படலம் (கார்னியா), விழித்திரை (ரெட்டினா) ஆகியவை கண்ணின் அதிமுக்கிய பாகங்கள். ரத்தத்தில் சர்க்கரை அளவு இயல்பைவிட (வெறும் வயிற்றில் 110 மி.கி.க்குக் குறைவாக, சாப்பிட்டு ஒன்றரை மணி நேரம் கழித்து 140 மி.கி.க்குக் குறைவாக) அதிகரித்துக் கொண்டே செல்லும்போது விழித்திரையில் உள்ள சிறுசிறு ரத்தக் குழாய்களில் கொஞ்சம் கொஞ்சமாக பாதிப்பு ஏற்படத் துவங்கும். விழித்திரைக்குச் செல்லும் ஆக்ஸிஜன் விநியோகத்தில் தடை ஏற்படும். நாம் பார்க்கும் பொருட்களின் பிம்பங்கள் விழித்திரையில் பதியும் இடமான 'மாகுலா'வில் சிவப்பு - வெள்ளை நிறப்புள்ளிகள் ஏற்படத் தொடங்கும். ஆனால் இந்தப் பாதிப்புகளுக்கு எவ்வித அறிகுறிகளும் இருக்காது. சர்க்கரை நோய் கட்டுக்குள் இல்லாமல் போகும்போது, அடுத்த கட்டமாக விழித்திரையின் சிறுசிறு நரம்புகளில் இரத்தக் கசிவு ஏற்பட ஆரம்பிக்கும். இவ்வாறு கட்டுப்பாட்டில் வைத்திராத சர்க்கரை நோயின் விளைவாக விழித்திரை பாதிக்கப்பட்டு முதலில் மங்கலான பார்வை, பிறகு தீவிர பார்வை இழப்பு என கண்ணொளியைப் பறிகொடுக்கும் அவலநிலையைத்தான் டயாபடிக் ரெட்டினோபதி என்கிறோம்.

முதலில் நீங்கள் ஒரு சர்க்கரை நோயாளி என்று தெரிந்ததுமே வருடத்துக்கு இருமுறை உங்கள் கண் மருத்துவரிடம் கண் பரிசோதனை செய்துகொள்வதை கடமைகளில் ஒன்றாக வழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும். எழுபதைக் கடந்த முதியவர்கள் எனில், அவர்களின் உறவினர்கள் காலண்டரில் குறித்து வைத்து பரிசோதனைக்குக் கூட்டிப் போக வேண்டும். டயாபடிக் ரெட்டினோ பதியை ஆரம்ப நிலையிலேயே கண்டு பிடித்தால் பார்வை இழப்பைத் தவிர்த்து விடலாம். இன்று இந்நோயைக் கண்டறிய அதிநவீன பரிசோதனை முறைகள் வந்துவிட்டன. கண்களில் சொட்டு மருந்தை விட்டு, 'ஆஃப்தல்

மாஸ் கோப்' கருவி மூலம் விழித்திரையை ஆரம்பநிலை சோதனை செய்து கண்டறியலாம். அடுத்து 'டிஜிட்டல் ஃபண்டஸ் கேமரா' மூலம் விழித்திரையை வண்ணப் புகைப்படமாக எடுத்து பாதிப்பின் அளவைத் துல்லியமாக அறியலாம்.



இதற்கு அடுத்த நிலையில் 'ஃபாண்டஸ் ஃப்ளோரசண்ட் ஆஞ்சியோகிராஃபியை' ஒரு கலர் ஃபுல் சோதனை எனலாம். கை நரம்பு வழியே ஊசி மூலம் சாயத்தை செலுத்தி, அது விழித்திரையின் ரத்தக் குழாய்களில் சென்று படியும் நிலையில், பாதிப்பின் பரவலை துல்லியமாக அறிந்துகொள்ளலாம். தற்போது இந்தச் சோதனையையும் பின்னுக்குத் தள்ளிவிட்டு வந்திருப்பது ஓசிடி (OCT - Optical Coherence Tomography). இந்த நவீன கருவி மூலம் நோயாளியின் கண்ணில் ஒளிக்கிற்றைச் செலுத்தி மிகத் துல்லியமாக விழித்திரையின் பாதிப்பை அறிய முடியும். இந்த நவீன சிகிச்சையில் ஊசிக்கோ, சாயத்துக்கோ, சொட்டு மருந்துக்கோ கூட அவசியமில்லை'' என்றவர் "டயாபடிக் ரெட்டினோபதி போலவே பார்வையை பறிக்கத் துடிக்கும் கண் நீர் அழுத்த நோய் (க்ளாக்கோமா) ஆரவாரம் இல்லாமல் அமைதியாகப் பாதிப்பை ஏற்படுத்தும் ஒன்று. மேலும் சர்க்கரை நோய் போல இதுவும் ஆயுட்கால நோய். இதனை முன்கூட்டியே கண்டறியும் நிலையில் தினமும் சொட்டு மருந்துபோட்டு பார்வை இழப்பைத் தவிர்க்க முடியும். ஆனால் பரபரப்பான வாழ்க்கை முறையில் தினமும் சொட்டு மருந்து போட்டுக் கொள்ள வேண்டுமே என்று நினைப்பவர்களுக்கு வரப்பிரசாதம் போல வந்திருக்கிறது, 'செலக்டிவ் லேசர் ட்ரேப்க்ளோபிளாஸ்டி (Selective Laser Trabeculoplasty) எனும் லேசர் சிகிச்சை. ஐந்து நிமிடத்தில் செய்யப்படும் இச்சிகிச்சை மூலம் கண் திரவம் கசிந்து வெளியேறும் அடைப்பை நிரந்தரமாகத் திறந்துவிட்டுத் தீர்வு பெறப்படுகிறது. தற்போது அரைமணி நேரத்தில் செய்யப்படும் 'ட்ரேப்க்ளோக்டமி' கண்புரை அறுவை சிகிச்சை நிரந்தரத் தீர்வாகும்" எனும் அருள்மொழிவர்மன், டயாபடிக் ரெட்டினோபதிக்கான நவீன சிகிச்சைகளைப் பற்றி விளக்குகிறார்.

"சர்க்கரை நோய் காரணமாக விழித்திரை பாதிக்கப்பட்டு, பார்வை இழப்பதைத் தடுக்க 'க்ரீன் லேசர்' சிகிச்சை உள்ளது. இதில் விழித்திரையில் பாதிக்கப்பட்ட நரம்புகள் ரத்தக் குழாய்கள் அனைத்தையும் சீல் செய்துவிடுகிறோம். நோயின் தீவிரத்துக்கு ஏற்ப ஒன்று அல்லது இரு தவணைகளாக க்ரீன் லேசர் தரப்படும். 'லேசர் போட்டோ கோகுலேஷன்' என்று அழைக்கப்படும் இச்சிகிச்சைக்கு பக்க விளைவுகள் எதுவும் இல்லை. மேலும் இருபது நிமிடத்தில் சிகிச்சை முடிந்து வீட்டுக்குச் சென்று விடலாம். ஆனால் சிகிச்சைக்குப் பிறகு பாதிக்கப்பட்ட ரத்தக் குழாய்களின் நிறம் மாற மூன்று மாதங்களாகும். எனவே மூன்று மாதம் கழித்து ஆஞ்சியோகிராபி செய்து சிகிச்சையின் பலனை அறிந்து கொண்டு நிம்மதிப் பெருமூச்சுவிடலாம்" என்றவர் "கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரம் என்ற பழமொழி டயாபடிக் ரெட்டினோபதி, கண் நீர் அழுத்த நோய் இரண்டுக்கும் கச்சிதமாகப் பொருந்தும் ஒன்று. ஆறு மாதத்துக்கு ஒரு அடிப்படை கண்பரிசோதனை செய்து கொண்டாலே பார்வை பிரச்னைக்கு டாட்டா காட்டிவிடலாம்" எனகிறார்.

- ஸ்ரீசக்கரம்

"அப்பா... நான் பெண் பார்க்க வரலே... எனக்கு இப்பக் கல்யாணம் வேணாம்ப்பா...?

"ஏண்டா...? நீ யாரையாவது...?" சண்முக சுந்தரம் முடிக்கவில்லை.

"போச்சு.. உடனே காதல் கீதல்னு சந்தேகப்பட ஆரம்பிச்சுடுவீங்களே... நான் புதுசா பிசினஸ் ஒண்ணு ஆரம்பிக்கப் போறேன்... அது எப்படிப் போகுமோ தெரியலே... அதனால ஒரு வருஷத்துக்குப் பிறகுதான் கல்யாணத்த பத்தியே யோசிக்கறதா இருக்கேன்..." என்றான் கண்ணன் பிடிவாதமாக.

"இதோ பாரு கண்ணா... நான் என்னோட சிநேகிதன் ரங்கராஜனை ரொம்ப நாளுக்கப்புறம் நண்பர் வீட்டு விசேஷத்துல சந்திச்சேன். நாங்க ரெண்டு பேரும் ஒரு காலத்துல அவ்வளவு நெருக்கம்... ஒரு மணி நேரம் பேசிக்கிட்டிருந்தோம்.... அப்பத்தான் பேச்சுவாக்குல அவனோட பொண்ணு ராதாவைப் பத்தி சொன்னான்... நானும் உன்னப் பத்தி சொன்னேன். பெண் பார்க்கக் கூப்பிட்டான். நானும் வர்றேன்னு சொல்லிட்டேன். நீ வந்து பாரு... மத்தத அப்புறம் பேசிக்கலாம்.."

சண்முகசுந்தரம் தன் மகனை வற்புறுத்திக்கொண்டிருந்ததைப் போலவே, ரங்கராஜன் வீட்டிலும்...

"இப்ப என்னோட கல்யாணத்துக்கு என்ன அவசரம்...?" அப்பாவிடம் கோபப்பட்டாள் ராதா.

"உன்னோட வயசும்... என்னோட வயோதிகமும்தான் காரணம்... நான் என் நண்பனிடம் பெண் பார்க்க வரச் சொல்லிட்டேன்... வந்து பார்த்துட்டுப் போகட்டும்..."

ராதா சிணுங்கினாள்... வருபவனை பிடிக்கவில்லை என்று கூற முடிவெடுத்தாள்...!

ராதாவைப் பெண் பார்க்க வந்த அன்று, கண்ணன் அவளிடம் சற்றுத் தனியாகப் பேச விரும்பினான்...

# பிடிச்சிருக்கு!

"இதோ பாருங்க... எனக்கு இந்தக் கல்யாணத்துல துளிகூட விருப்பமில்லை... எங்கப்பாவின் கட்டாயத்துக்காகத்தான் நான் பெண் பார்க்க வந்தேன்..." என்று பேச்சை ஆரம்பித்தவனை, ராதா சற்று வியப்புடன் பார்த்தாள்.

'அட... இது என்ன அதிசயம்...? நாம நினைக்கறது மாதிரியே இவரும்...' சந்தோஷத்துடன் அவனை முதன்முறையாகக் கூர்ந்து கவனித்தாள் ராதா...

நல்ல சிவப்பு நிறத்துடன், களையான முகத்துடன் காணப்பட்ட கண்ணனை கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தாள்...!

ராதா இவ்வளவு அழகாக இருப்பாள் என்று கண்ணனும் எதிர்பார்க்கவில்லை..! தனது பேச்சு அவளது மனதை எவ்வளவு நோகடித்திருக்கும் என்பதை உணர்ந்து,

"இதோ பாருங்க... நான் உங்களைப் பிடிக்கலைன்னு சொல்லலை... பிடிக்கலைன்னு சொன்னது கல்யாணத்தை... நான் ஒரு பிசினஸ் ஆரம்பிக்கப்போறேன்... அது கொஞ்சம் ரிஸ்க்கானது... கல்யாணம் பண்ணி மனைவி வந்த பிறகு, ஒருவேளை



வியாபாரத்தில் எனக்கு நஷ்டம் ஏற்பட்டதுன்னா, 'எல்லாம் மனைவி வந்தவேளை... அவ கால்வச்ச நேரம் சரியில்லை'ன்னு என் வீட்டாரோ, சுற்றமோ பேச நான் இடம் தர விரும்பலே... அதனால பிசினஸ் நல்லபடியா வளரட்டும்... அப்புறம்தான் கல்யாணம்... அதனால என்னைப் பிடிக்கலேன்னு நீங்களும் உங்கப்பாகிட்டே சொல்லிடுங்க... நானும் எங்கப்பாகிட்டே சொல்லிடறேன்...'' என்றான்.

'அட... இப்படியும் ஓர் ஆண்மகனா...? கல்யாணத்துக்கு முன்பே, தன் மனைவி பேரில், எந்தப் பழிபாவமும் வரக்கூடாதென்று நினைக்கிறாரே...? எவ்வளவு உயர்ந்த பண்பு...' என்று அறையைவிட்டு ஹால் பக்கம் வந்தாள். கண்ணனும் அவளைப் பின்தொடர்ந்தான்.

வந்தவள், ''இவருக்கு என்னை ரொம்பப் பிடிச்சிருக்காம்... அவரோட அப்பா கிட்டே சொல்லக் கூச்சப்பட்டு, என்னைச் சொல்லச் சொன்னார். எனக்கும் இவரை ரொம்பவே பிடிச்சிருக்கு...'' என்றாள் வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டு...!

ராதாவின் இந்தப் பேச்சால், அதிர்ச்சியடைந்த கண்ணன் கோபத்துடன் அவளை முறைத்தான்...!

'கோபப்படாதீங்க... பிசினஸ்ல 'ரிஸ்க்' இருக்கிற மாதிரி, ஒரு பெண்ணுக்குக் கல்யாணம்ங்கறதும் ரிஸ்க்தான். உங்களை மாதிரி நல்ல மனுஷன் கிடைக்கறது அபூர்வம். நான் எப்படி உங்களை மிஸ் பண்ணுவேன்' என்று மனதுக்குள் சொல்லிக்கொண்டாள் ராதா. ○

**க. ஒப்பிலி அப்பன்**

ஓடும் பாம்பை கையால் பிடித்து 'ஹாய்' சொல்லத் துடிக்கும் இருபத்தியிரண்டு வயது துள்ளல் பேர்வழி ஸ்ரீபாலாஜி. தமிழக கிரிக்கெட் அணிக்காக போதும் போதும் என்கிற அளவுக்கு விளையாடி, பல முறை இரட்டை சதங்களில் ரன்களைக் குவித்த நாட்-அவுட் பேட்ஸ்மேன். வாரம் ஒரு முறை நண்பர்கள் குழுவோடு வங்கக் கடலுக்குள் அரை கிலோமீட்டர் தூரம் நீந்திவிட்டு வருகிற அதிரடி இளைஞர். அப்படிப்பட்டவர் வவுனியா பற்றிப் பேசும்போது பொட்டுப் பொட்டாய் நெற்றியில் வியர்த்து விடுகிறது. எம்.என்.எம். ஜெயின் கல்லூரியில் இறுதி யாண்டு பொறியியல் படித்துக்கொண்டே 'காதல் கடிதம்' படத்தில் கதாநாயகனாக நடித்துக் கொண்டிருக்கிறார்.

# போரை நிறுத்தும் காதல் கடிதம்!

"சின்ன வயசுலேர்ந்து சினிமால எப்படியாவது பெரிய ஹீரோவா வரணும்னு ஆசை. அப்பா சிவாஜியோட தீவிர ரசிகர். 'வா, சிவாஜி அங்கிளைப் பார்த்துட்டு வரலாம்'னு கூட்டிக்கிட்டுப் போனார். கம்பீரமா வெள்ளை ஜிப்பா வெள்ளை தாடியோட இருந்த அவரை பிரமிப்பா பார்த்துக்கிட்டு இருந்தேன். 'என்ன படிக்கிறே'ன்னு கேட்டார் 'ப்ளஸ் டூ'ன்னு சொன்னேன். 'அதுக்கப்புறம்'னு கேட்டார். நான் பதில் சொல்றதுக்குள்ள அப்பா முந்திக்கிட்டு 'இன்ஜினியரிங் படிக்க வைக்கலாம்னு இருக்கேன்'னு சொன்னார். 'உங்க அப்பன் அவன் விருப்பத்தைச் சொல்றான். படவா! உன் கண்ணுல சினிமா ஆசையில்ல தெரியுது'ன்னு என்னைப் பார்த்துச் சொன்னார். மிராகிள் மாதிரி இருந்தது. எப்படிக் கண்டுபிடிச்சார்னு ஆச்சர்யம். 'சினிமாவுல வரலாம்னா முதல்ல நிறைய கத்துக்கோ... உடம்பை நல்லா வெச்சுக்கோ.. ஆர்வம் மட்டும் போதாது'ன்னு கன்னத்துல செல்லமா ஒரு குத்துவிட்டார். அதுதான் ஆசீர்வாதமோ என்னவோ.. நான் இப்போ ஹீரோவாயிட்டேன்" என்று ஆச்சர்யப்படும் பாலாஜி, எட்டாம் வகுப்பு படித்துக் கொண்டிருந்தபோது 'இதயம் பேசுகிறது' மணியன் தயாரித்த 'காஞ்சி பரமாச்சார்யார்' வாழ்க்கை வரலாற்று தொலைக்காட்சித் தொடரில் பால சங்கராச்சாரியாராக நடித்திருக்கிறாராம்.

"சேரன்கிட்டே ஆட்டோகிராஃப் வரைக்கும் உதவி இயக்குநரா பணிபுரிந்த முகேஷ், தன்னோட 'காதல் கடிதம்' கதைக்கு ஹீரோ தேடிக்கிட்டு இருக்கிறதைக் கேள்விப்பட்டு அவர்கிட்டே போனேன். அங்கே போனால் ஒரு அதிர்ச்சி காத்துக்கிட்டு இருந்தது. ஸ்க்ரீன் டெஸ்ட் எடுத்து ஹீரோவா செலக்ட் ஆன பல பேர், கதையைக் கேட்டுட்டு இம்ப்ரஸ் ஆகியிருக்காங்க. ஆனால் இயக்குநரும், தயாரிப்பாளரும் 'கதைக்களப்படி பாதிப் படத்தை பதற்றமான இலங்கை வவுனியா பகுதியிலே எடுக்கப் போறோம். படப்பிடிப்பு சமயத்துலே எது வேணா நடக்கலாம் ஓ.கே.வா'ன்னு கேட்கப் போய் பல பேர் தலைதெறிக்க திரும்பிப் பார்க்காமல் எஸ்கேப் ஆகி இருக்காங்க. நான் சின்ன வயசுலேர்ந்தே துடுக்கான ஆள். 'கதை இவ்ளோ சூப்பரா இருக்கும்போது, வவுனியா என்ன, பாலஸ்தீனத்துக்கே வர்றேன்'னு சொன்னேன். 'நீதான்யா ஹீரோ'ன்னு தட்டிக் கொடுத்து அழைச்சுக்கிட்டுப் போனாங்க. அங்கே போன பிறகுதான் உண்மையான நிலவரம் கலவரமாயிடுச்சு" என்று வவுனியா காட்டில் சிக்கிக்கொண்ட அனுபவத்தை விவரிக்கிறார்.

"கதைப்படி இலங்கையிலிருந்து மிழு

சிக் ஸ்கூலில் படிக்க சென்னை வர்ற இலங்கைத் தமிழ்ப் பெண்ணை நான் காதலிக்கிறேன். போர் நிறுத்தம் ஏற்பட்டிருந்த இலங்கையிலே மறுபடியும் பிரச்னை வெடிக்க, படிப்பை பாதியிலே விட்டுட்டு இலங்கைக்குப் போயிடுறாங்க. அவங்களைத் தேடி நான் வவுனியாவுக்குப் போறேன். படத்துலே 'யாழ்தேவியில் காதல் செய்தால்'னு ஒரு சூப்பர் பாட்டு. கொழும்பு துறைமுகத்துக்கும் யாழ்ப்பாணத்துக்கும் இடையிலே ஓடிக்கிட்டிருந்த யாழ்தேவி ரயில், இப்போ ஈழப் பிரச்னை காரணமா வவுனியா வரைக்கும்தான் போகுது.. அந்த டிரைன்ல ஏறி என்னோட காதலியைப் பற்றி பாடிக்கிட்டே, வவுனியா போற மாதிரி க்ளைமாக்ஸ் காட்சி. இதுக்காக யாழ்தேவி ரயிலையே வாடகைக்கு எடுத்து டிரைன்ல மட்டுமே நான்கு நாட்கள் ஷூட் பண்ணினோம். வவுனியா, கொழும்பு இரண்டு இடத்துலேயுமே மக்கள் கூட்டம் கூட்டமா ஷூட்டிங் பார்க்க வந்திருந்தாங்க. கடைசி நாள் இரவு படப்பிடிப்பு. யாழ் தேவி இன்ஜின்ல டிமர் கோளாறு. நடுராத்திரியில... நடுக் காட்டுல நின்னு போச்சு. பயங்கர கும்மிருட்டு. எப்போ என்ன நடக்கும்னே தெரியல. தூரத்துல துப்பாக்கிச் சத்தமும், ராக்கெட் வீசுற சத்தமும் கேட்டுக்கிட்டேதான் இருந்தது. விடிய விடிய எல்லோரும் உயிரைக் கையில பிடிச்சுக்கிட்டு இருந்தோம். விடிஞ்ச பிறகுதான் உயிரே வந்தது. இலங்கையில இருந்த இருபத்தஞ்சு நாட்களில், எங்க ஷூட்டிங் ஸ்பாட்டுக்கு நாலு அஞ்சு கிலோமீட்டர் தூரத்துல பல கண்ணிவெடி சம்பவங்கள் இப்போ நினைச்சாலும் பகீர்னு இருக்கு. அங்கேயே பிரச்னைக்கு மத்தியிலேதான் வாழ்க்கைன்னு வாழுற அந்த மக்களை நினைச்சுப் பாருங்க.." என்று த்ரில்லுடன் சொல்லி முடித்தார் பாலாஜி.

"தமிழ் சினிமாவில் எத்தனையோ காதல் கதைகள் வந்திருக்கு. ஆனால் ஒரு காதல் கடிதம், ஒரு நாட்டில் நடக்கிற உள்நாட்டுப் போரையே நிறுத்தும் சக்தி படைச்சதுன்னு காட்டுறோம். இது ஏதோ ஃபேண்டஸி அல்ல. ரத்தமும் சதையுமான மனித உணர்ச்சி" என்று சொல்லி மேலும் ஆர்வத்தை அதிகரிக்கச் செய்கிறார் படத்தைத் தயாரிக்கும் புலம்பெயர் இலங்கைத் தமிழரான டி.தில்லைவண்ணன்.

- ஸ்ரீ





# அவசர மனோவும் ஆவேச செல்லக்குமாரும்.

கராத்தே, குங்ஃபூ எல்லாம் கத்துக்கணும்னா வேற எங்கயும் போயி ஃபீஸ் கட்டி காசைக் கரியாக்கிடாதீங்கப்பு... நம்ம சத்தியமூர்த்திபவனுலயே ஃப்ரீயா சொல்லித் தர்றாங்க... அதுவும் தியரியே கெடையாது. நேரடியா பிராக்டிகல் தான். போனவாரம் சத்தியமூர்த்தி பவன்ல ஏதோ குத்துச்சண்டைப் போட்டி நடக்குதுன்னு எனக்கு ஒரு எஸ்.எம்.எஸ் வந்துச்சு. சரி... என்னதான் நடக்குதுன்னு பார்த்துட்டு வந்துடலாம்னு கிளம்பினேன். அடேயப்பா... சும்மா சொல்லக்கூடாது. அரசியல்ல இன்னிக்கு உருட்டுக்கட்டையும், டியூப் லைட்டும் எந்த அளவுக்கு உபயோகமா இருக்குன்னு அன்னிக்குத்தான் எனக்குத் தெரிஞ்சுது. நல்லவேளை ஹெல்மெட் எடுத்துக்கிட்டுப் போயிருந்தேன்.

அதாவதுப்பா, கதர்கட்சிக்கு வில்லிவாக்கம் தொகுதி கிடைக்கலையாம். எங்க தலைவரு நின்னுடுவாருங்கற காரணத்துக்காக வாசன் அதைத் தடுத்துட்டாருன்னு செல்லக்குமாரு கோஷ்டி ஆளுங்க வீரப்பமொய்லியோட கொடும்பாவியை எரிச்சுருக்காங்க. உடனே மேலிடம் செல்லக்குமாரை கட்சியவிட்டு நீக்க, உடனே ஆதரவாளர்கள்லாம் டென்ஷனாகி, பவனுக்குள்ள வந்திருக்காங்க. ராயபுரம் மனோ அதைத் தடுக்க, ஏகப்பட்ட தள்ளுமுள்ளு ஆயிடுச்சி. இதுல மனோவை கீழதள்ளிட்டாங்க போல... அதுல டென்ஷனான அவரோட ஆளுங்க, செல்லக்குமாரு ஆளுங்களைப் போட்டுப் பின்னிப்புட்டாங்க பின்னி. டப்புன்னு கீழ கிடந்த கல்லு ஒண்ணை எடுத்து ஒரு ஆள் மேல மனோ தூக்கிப்போட, அம்மா சேனலு இதை வளைச்சு, வளைச்சு போட்டோ புடிச்சிடுச்சு. இதுனால ஏதாவது சிக்கல் வருமோன்னு குழப்பத்துல இருக்கு மனோ குரூப்பு.



* ... ஆவேசம்!

பட்டுன்னு நான் செல்லக்குமாருக்கு போன் போட்டுப் பேசினேன். மனுஷரு செம டென்ஷனா இருந்தாரு. "ஒரு கட்சியோட தலைமை அலுவலகத்துக்குள்ள இருந்து இரும்புக் கம்பி, உருட்டுக்கட்டை எடுத்துட்டு வர்றாங்கன்னா, எந்தளவுக்கு ரௌடிகளோட எண்ணிக்கை கட்சிக்குள்ள வந்திருக்கு பாருங்க. ஒரு மாவட்டத் தலைவர் முன்னநின்னு இந்த அராஜகத்தைப் பண்ணினதோட இல்லாம தானே



* அவசர...

ஒருத்தர் மேல கொலை வெறியோட கல்லைத் தூக்கிப் போட்டிருக்காருன்னா, இது மிகப்பெரிய ஆபத்து. அதனால, சம்பந்தப்பட்டவங்க மேல உடனடியா நடவடிக்கை எடுக்கணும். ஆனா இந்தச் சம்பவத்துக்கும், தலைவர் ஆளுபோல. பழங்கதையெல்லாம் பேசிட்டு, கடைசியா மேட்டருக்கு வந்தாரு. "இந்தக் காலத்து பிள்ளைங்களுக்கு வேகம் இருக்கிற அளவுக்கு விவேகம் இல்லப்பா. மாவட்டத் தலைவரு போஸ்ட்



**ஒற்றன்**

கிருஷ்ணசாமிக்கும் சம்பந்தமில்ல. இது முழுக்க, வேற ஒரு நபரோட திட்டமிட்ட சதி''ன்னு முடிச்சுக்கிட்டாரு.

மனோ குருப்பைச் சேர்ந்தவங்கள தேடிக்கிட்டே இருந்தேன். கடைசில ஒருத்தர் சிக்கினாரு. "பவனைக் கைப்பத்தப் போறாங்களாம்... அதைத் தடுத்தாகணும்னு போன்ல சொன்னாங்க... சரின்னு ஆட்டோ புடிச்சு ஓடியாந்தோம். நாங்க ரொம்ப நேரம் பொறுமையாத்தாம்பா இருந்தோம். ஆனா அண்ணனை கீழபிடிச்சுத் தள்ளிவிட்டதுக்கப்புறமும் சும்மா இருந்தா எப்படி? அதுலயும் தள்ளிவிட்டவன் பெரிய ஆளா இருந்தாலும் பரவால்ல. அவனே ஒரு சின்னப்பய. அதான் நாங்களும் போட்டுத் தாக்கிட்டோம்"னு சொல்லிட்டு ஒரு ஆட்டோ மேல ஜம்ப் பண்ணி எஸ்கேப் ஆயிட்டாரு.

சரி... அடுத்து என்ன நடக்கும்னு தெரிஞ்சுக்கலாம்னு மேட்டர் கொஞ்சம் அடங்கினவுடனே பக்கத்துல நின்னுக்கிட்டு இருந்த கதர் வேட்டிகிட்ட கேட்டேன். பார்ட்டி ரொம்ப சீனியரான





டுல இருக்குறவரு இந்த அளவுக்கு ஃபீல்டுல இறங்கலாமா... ஏற்கெனவே விநாயகமூர்த்தி மேட்டரு ஒண்ணு மனோ மேல இருக்கு; அதனால இப்போ ரெண்டு மேட்டரும் மனோவுக்கு எதிரா ஸ்ட்ராங்காயிருக்கு. அவருக்காகவே பிளான் பண்ணி ஆர்.கே நகரை வாங்கினாங்க. இப்படி அவசரப்பட்டுட்டாரு... என்ன ஆகப்போகுதோ... இனிமே பவனுக்குள்ள வர்றதுக்கே போலீஸ் பாதுகாப்பு வேணும் போல''ன்னு சொல்லிட்டுக் கிளம்ப, இதுக்கு மேல மேட்டர் தேத்த ஆளில்லாததால நானும் கிளம்பினேன். ○



விளம்பரத் துறையில் இருபது வருடங்களுக்கு மேல் அனுபவம் கொண்டவர் ராமானுஜம் ஸ்ரீதர். இன்டக்ரேட்டட் ப்ராண்ட் காம் என்ற அமைப்பின் முக்கிய செயல் அதிகாரியாக இருக்கும் இவர், தான் எழுதிய 'ஒன் லேண்ட், ஒன் பில்லியன் மைண்ட்ஸ்' எனும் நூலை சமீபத்தில் வெளியிட்டார். அந்த வெளியீட்டு விழாவில் அவர் பகிர்ந்துகொண்ட சில சுவையான கருத்துகள்.

# அப்படியென்ன அக்கறை!

- பல நிறுவனங்களின் தலைவர்களும் நிர்வாக இயக்குநர்களும் குறைந்தது ஐம்பது வயதைத் தாண்டியவர்கள். இந்த நிறுவனங்களின் தயாரிப்புகளின் முக்கிய வாடிக்கையாளர்கள் டீன்ஏஜ் பிரிவினர் எனும்போது, அவர்களின் தேவை மற்றும் விருப்பத்தைப் புரிந்துகொள்ளாமல் தயாரித்தால் அது பெரிய அளவில் விற்காது.

- பிரபல சினிமா நட்சத்திரங்களை விளம்பரங்களில் பயன்படுத்தினால் பலன் இருக்கும். 2004-ல் அமிதாப்பச்சன் 67 விளம்பரங்களில் தோன்றியிருந்தார். இதுபோன்ற விளம்பரங்களுக்கு ஆகும் செலவோடு ஒப்பிட்டால், லாபம் மிகக் குறைவாகவே இருக்கும் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது.

- ஒரு விலை உயர்ந்த டிடர்ஜென்ட் சோப் பற்றிய விளம்பரம். 'உங்கள் மனைவியின் கைகள் புண்ணாகலாமா? எனவே பாதுகாப்பான, அதேசமயம் துணிகளை நன்கு வெளுக்கக்கூடிய எங்கள் டிடர்ஜென்ட் பவுடரையே பயன்படுத்துங்கள்' என்றது விளம்பர வாசகம். இந்த விளம்பரம் எதிர்பார்த்த பலனைத் தரவில்லை. காரணம் அதிக விலைகொண்ட இந்த டிடர்ஜென்டை எளிதில் வாங்கக்கூடிய மேல்தட்டு மக்களில் துணிகளைத் துவைப்பது குடும்பத் தலைவி அல்ல. வேலைக்காரப் பெண்மணிதான். எனவே அதிக விலை கொடுத்து வாங்குவதில் வீட்டுத் தலைவிகள் விருப்பம் காட்டவில்லை. இதையும் மீறி குடும்பத் தலைவர் அதை வாங்கிச் சென்றால் 'வேலைக்காரப் பெண்ணின் கைகள் மீது அப்படியென்ன இவருக்கு அக்கறை?' என்று சந்தேகம் வரக்கூடும்!

- ஒரு பிரபல வங்கி விளம்பரத்தில் 'எந்த நிபந்தனையுமின்றித் தங்களிடம் கடன் பெறலாம்' என்பதை அறியாது ஓர் இளம்பெண் தன் அம்மாவிடம் சவால் விடுவதாகவும், சவாலில் தோற்றதால் ஒப்புக்கொண்டபடி நூறு பச்சை மிளகாயை மகள் சாப்பிட, எதிரே அம்மா சிரித்தபடி ஒண்ணு, ரெண்டு எண்ணுவதுபோலவும் விளம்பரம் இருந்தது. விளம்பரம் வித்தியாசமானதுதான். ஆனால் இந்த உத்தி எடுபடக்கூடியதா?

- மாரடைப்பு, ஆபரேஷன் தியேட்டர் என்றெல்லாம் காட்டி ஒரு சூரியகாந்தி எண்ணெய் விளம்பரம் வெளியாக, பெரிய 'கன'வான்களோடு வெளியான போட்டி நிறுவன எண்ணெய் விளம்பரம் 'தொப்பையைக் குறையுங்க... ப்ளீஸ்' என்று கூறியது மிகவும் புத்திசாலித்தனமாக இருந்தது.



• ராமானுஜம் ஸ்ரீதர்

தொகுப்பு: **ஜி.எஸ்.எஸ்**

ஸ்ரீ குருப்யோ நம:

# 17வது வருஷ புண்யதிதி ஆராதனை விழா

பூஜ்ய ஸ்ரீ குரு மஹராஜ் ஸ்வாமிகளின்
நல் ஆசிகளுடன்

## ஸ்ரீ குரு ராமாநந்தேந்திர ஸரஸ்வதி ஸ்வாமி களின்

**17ஆம் வருட புண்யதிதி ஆராதனை விழா**

6-4-2006 வியாழக்கிழமை அன்று தஞ்சாவூர் ஸ்ரீனிவாசபுரம்
30D, கீரி ரோடு, சாந்தாஸ்ரமத்தில் நடைபெறும்.



### நிகழ்ச்சி நிரல்

| | | |
|---|---|---|
| காலை 6.00 மணி | - | கோ பூஜை |
| 7.00-10.30 மணி வரை | - | ஸ்ரீ சுவாமிகளின் சமாதி பூஜை |
| 10.30 -12.30 மணி வரை | - | புண்ணிய திதி ஆராதனை |
| 12.30 மணி | - | சமாராதனை |
| மாலை 6.00 மணி முதல் | - | திரை புகழ் இளந்தளிர் மஹதி குழுவினரின் இன்னிசைக் கச்சேரி |

அனைவரும் ஆராதனை விழாவில் கலந்து கொண்டு
ஸ்ரீ குருவின் ஆசிகளை பெற வேண்டும்
என்று கேட்டுக் கொள்கிறேன்.

வணக்கங்களுடன் / வாழ்த்துக்களுடன்
**ஆர். ராம்பாவுஸ்வாமி**, சாந்தாஸ்ரமம்
போன்: 04362 - 222708 / 044 - 2498 5267

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.

# பல்வேறு பற்குச்சிகளின் பல்வேறு பலன்கள்



ஆலும், வேலும் பல்லுக்கு உறுதி தருபவை. நாயுருவிக்குச்சி தைரியத்தையும், மேதையையும், அறிவையும், மென்மையான குரலையும் தரும். மாதுளங்குச்சி, வெட்பாலைக் குச்சி, மருதம்குச்சி ஆகியன அழகை தரும். ஜாதி மல்லிக்குச்சி, மந்தாரகுச்சி கெட்ட கனவுகளைப் போக்கும். எருக்கு வீரியத்தைக் கட்டும். ஆல் பசியைத் தூண்டும். புங்கு வெற்றி நோக்கை வளர்க்கும். இச்சி பொருள் சேர்க்கும். இலந்தை இனிய குரல் தரும். கருங்காலி வாய் நாற்றத்தைப் போக்கி மணம் தரும். வில்வம் செல்வத்தைப் பெருக்கும். அத்தி பேச்சு வன்மையை வளர்க்கும். மா ஆரோக்கியத்தை நிலைக்கச் செய்யும். வேம்பு, வாய் நாற்றம், பற்களில் சீழ், வேக்காளம், ஈறுகளில் வலி இவைகளைப் போக்கும். கடம்பு தைரியத்தையும், மேதையையும் அதிகப்படுத்தும். செண்பகம் வாக்குவன்மை, கேட்டது மறக்கா திருத்தல் இவைகளைத் தரும். பொன் வாகை புகழ், அழகு, ஆயுளைத் தரும்.

எங்களுடைய பல இனிப்பு வகைகளும், பல கார வகைகளும் அவற்றிற்கு தகுந்த பல்வேறு நற்பலன்களை அளிக்கக் கூடியவை.

**கல்யாண வைபவங்களுக்கு**

சீர்முறுக்கு, சீர் முள்ளுத்தேன்குழல், அதிரசம், அப்பம், திரட்டுப்பால், பருப்புத் தேங்காய், வகைகள் ஆர்டரின் பேரில் செய்துத் தரப்படும்.



## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

எண்.24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு, சென்னை-20.
போன் : 24915662, 24914213

1/1, AE பிளாக், 11வது பிரதான சாலை,
8வது தெரு, அண்ணா நகர், சென்னை-40.
போன் : 42634422, 42634433